ஆய்வு நோக்கில் சமய வழிகாட்டி நூல்கள் - 6

# அம்மன் கோயில்கள் (வழிபாடும் வரலாறும்)

## (பௌத்தத் தடயங்களுடன்)

சாதனை திலகம், அறிவு மலர்

**முனைவர் செ. ராஜேஸ்வரி**



சந்திரோதயம் பதிப்பகம்
மதுரை. Ph. 7010997639

*ஆய்வு நோக்கில் சமய வழிகாட்டி நூல்கள் - 6*

# அம்மன் கோயில்கள் வழிபாடும் வரலாறும்

[பௌத்தத் தடயங்களுடன்]

**சாதனை திலகம், அறிவு மலர்**

**முனைவர் செ. இராஜேஸ்வரி** M.A., M.Phil., Ph.D.,

*தமிழக மாநில அரசின் சிறந்த மொழிபெயர்ப்பாளர் விருதாளர் (2022), சிறந்த பதிப்பக விருதாளர் (2023). தமிழணங்கு, சக்தி பெண்ணிதழ் ஆய்விதழ்களின் ஆசிரியர்.*



சந்திரோதயம் பதிப்பகம்
மதுரை. **Ph. 7010997639**

## நூல் விவரம்

| | | |
|---|---|---|
| நூல் வரிசை | : | ஆய்வு நோக்கில் சமய வழிகாட்டி நூல்கள் - 6 |
| நூலின் பெயர் | : | அம்மன் கோவில்கள் வழிபாடும் வரலாறும் |
| துறை | : | சமூகப் பண்பாட்டு ஆய்வு |
| ஆசிரியர் | : | முனைவர் செ. இராஜேஸ்வரி |
| வடிவமைப்பு | : | செ. மீனாட்சி |
| பதிப்பாளர் | : | சந்திரோதயம் பதிப்பகம்<br>3/422, திருவள்ளுவர் தெரு<br>தினமணி நகர், மதுரை – 625 018 |
| பதிப்பு | : | 2025 |
| மொழி | : | தமிழ் |
| பக்கங்கள் | : | 136 |
| விலை | : | Rs.250/- |
| பன்னாட்டுத் தரப்புத்தக எண் | : | 978-81-983729-8-7 |

- - - - -

| | | |
|---|---|---|
| Book Series | : | Studies on Religious History & Worship number - 6 |
| Book | : | Amman Kovilgal Vazhipadum Varalarum |
| Subject | : | Socio Cultural Religious Studies |
| Author | : | Dr.C.Rajeswari, M.A., M.Phil., Ph.D., |
| Designer | : | C. Meenatchi |
| Publisher | : | Chandrothayam Pathippagam<br>3/422, Thiruvalluvar Street<br>Dinamani Nagar, Madurai - 625 018 |
| Publish | : | 2025 |
| Pages | : | 136 |
| Price | : | Rs.250/- |
| ISBN | : | 978-81-983729-8-7 |

# என்னுரை

*தமிழ்நாடு குமரிக்கண்டமாக இருந்த காலத்திலிருந்து பெண் தெய்வ வழிபாடு இருந்து வருகின்றது. ஆதியில் பெண்ணை மூத்தவளாகவும் தலைவியாகவும் கருதி அக்கா வழிபாடு இருந்தது. பின்பு அவளுடைய பிள்ளைப்பேற்று சக்தியைக் கண்டு வியந்ததால் தாய்த் தெய்வ வழிபாடு தோன்றியது. அதன் பின்பு ஆண் தெய்வ வழிபாடாக குமரன் வழிபாடு தோன்றியது.*

### அம்மன் வழிபாட்டு வரலாறு

*தாய் / அம்மன் வழிபாடு படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூன்று தொழில்களைச் செய்பவளாக வளர்ந்தது. நாகர்கள் இனமாக பழங்காலத்து மக்கள் வாழ்ந்த காலத்தில் நாகத்தை ஆட்டி வைக்கும் பிடாரி நாகர் குலத்தின் பெண் தெய்வமாகப் போற்றப்பட்டாள். அக்காலகட்டத்தில் 'ஊருக்கு ஒரு பிடாரி' இருப்பது மரபாயிற்று. அதன் பின்பு கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் தமிழகம் வந்த பௌத்த சமயம் பெண் தெய்வ வழிபாட்டை முறைப்படுத்தியது. பெண் புத்தர் என்ற நிலையில் தாரா தேவிக்கு தங்கள் மடாலயங்களில் வழிபடு தகுதியை வழங்கியது. இவள் பிள்ளை வரம் தருபவள் ஆகவும் நோயிலிருந்து மக்களைக் காக்கின்றவளாகவும் வேளாண் கடவுளாகவும் பல வகையில் பல உருவங்களில் போற்றப்பட்டாள். பௌத்த சமயம் பெண் தெய்வ வழிபாட்டை வகைப்படு விரிவாக்கியது இருந்தது. சைவ, வைணவ சமயங்கள் தவ்வை, பிடாரி, தாரா, பின்னரே பெண் தெய்வங்களின் பெயர் மற்றும் கதைகளை சம்ஸ்கிருதமயமாக்கி தன்வயப்படுத்தின. (Sanskritised and Synchronised).*

## பௌத்தத்தில் பெண் தெய்வ வழிபாடு

*பௌத்த சமயத்தில் இருந்த அம்மன் வழிபாடு இந்து சமயத்தில் இரண்டு வகையாக மாறியது. ஒன்று லலிதாசனத்தில் அமர்ந்திருக்கும் மாரியம்மன் மற்றொன்று வீராசனத்தில் அமர்ந்து தலையை ஒருபுறம் சாய்த்தபடி காணப்படும் காளியம்மன்.*

## பெண் மருத்துவ புத்தர் பர்னஷ்வரி

*பௌத்த சமயத்தில் பர்னஷ்வரி என்ற பெண் புத்தர் தொற்று நோய்களைத் தீர்க்கும் தேவதையாக நீல நிறத்தில் /கருப்பு நிறத்தில் வணங்கப்பட்டார். மருத்துவ புத்தர் சிம்மாசனத்தில் எழுந்தருளி இருந்தார். பௌத்த சமயத்தில் மருத்துவ சேவை மடாலயங்களில் முக்கியப் பணியாக நடைபெற்றது. ஒவ்வொரு நோய்க்கும் தனித்தனியாக அவர்கள் ஒரு புத்தரை வைத்து வழிபட்டனர்.*

## விஷக்கடி சுகமாக்கும் தாரா

*தாராவைப் பெண் புத்தராகக் கருதி அவளைப் பல நிறங்களில் சிவப்பு, வெள்ளை, மஞ்சள் பச்சை என்று பல பயன்களுக்காக வழிபட்டனர். பச்சை தாராவை (ஜங்குலி தாரா)ஷியாம் தாரா என்ற பெயரில் பச்சை, நீலம், கருப்பு நிறம் கொண்டவளாக வணங்கினர். இவள் பாம்பு, தேள் போன்ற விஷக்கடியின் தீமைகளைப் போக்குவாள். இந்தத் தாராவுக்கு ஆறு கரங்கள் அல்லது எட்டுக் கரங்கள் உண்டு. ஜங்குலி தாரா இலைகளாலான (இங்கு வேம்பு) அரையாடை உடுத்தி இருந்தாள். வலது பக்கக் கரங்களில் வஜ்ராயுதம், மழு, அம்பு, ஆகியவற்றையும் இடது பக்கக் கரங்களில் வில், மலர், கிளை ஆகியவற்றையும் கொண்டிருந்தாள். இவள் காலப்போக்கில் தென் மாவட்டங்களில் மாரியம்மன் எனப்பட்டாள். வட மாவட்டங்களில் ரேணுகா தேவி ஆனாள்.*

*பிடாரியை பௌத்த சமயம் தனது விஷக்கடி போக்கும் பச்சை தாரா அல்லது ஜாங்குலி தாராவுடன் இணைத்தது. ஆனால் சைவ சமயப் பேரெழுச்சிக்குப் பின்பு பௌத்தர்களின் சாமி பெயர்கள் நீக்கப்பட்டன. பச்சை தாரா பல இடங்களில் சிவன் கோயில்களில் அம்மன், மாரியம்மன், திரவுபதியம்மன், ரேணுகா*

*பரமேஸ்வரி, என்று பெயர் மாற்றம் பெற்றாள். பழந்தமிழர்களான நாகர்களின் பூர்விக தெய்வமான பிடாரிக்கு காளியம்மன் என்ற பெயர் நிலைத்தது. .சில ஊர்களில் துர்கா பரமேஸ்வரி, உஜ்ஜினி மாகாளி, பேச்சியம்மன், பெரியாச்சி அம்மன் என்று பெயர் பெற்றாள்.*

### தனி அம்மன்

*பௌத்த மருத்துவத் தெய்வமான பரனஷ்வரி உருவத்தில் சமயபுரம் மாரியம்மன், சிறுவாச்சூர் மதுர காளியம்மன் போல் லலிதாசனத்தில் அமர்ந்திருப்பாள். ஒரு காலை மடித்து ஒரு காலைத் தொங்கவிட்டு இருக்கும் இவர்களுக்கு ஆறு கைகள் அல்லது எட்டுக் கைகள் இருக்கும். காலடியில் அசுரன் சிலை இருக்கும். ஆதியில் இவர்களுக்கு கண்வன் (சிவன்) கிடையாது. ஆதி சங்கரர் காலத்தில் சில கோயில்களில் அருகில் ஒரு சிவனையும் பிரதிஷ்டை செயத்தனர். இப்பெண் தெய்வங்களின் வீரியத்தைக் குறைக்க மேருமலை ஸ்ரீ சக்கரம் தாடங்கம் போன்றவற்றைச் சேர்த்தனர்.*

### நோய் தீர்க்கும் அமிர்தம்

*மாரியம்மன் என்று பெயர் சூட்டப்பட்ட பௌத்த மருத்துவப் பெண் தெய்வங்களின் வலது கையில் ஒரு மருந்து கிண்ணம் இருக்கும். இவர்களின் நோய் தீர்க்கும் சக்தியை இக்கிண்ணம் புலப்படுத்தும். இதனை நோய் தீர்க்கும் அமிர்தம் என்றே பௌத்தர்கள் அழைத்தனர். ஆனால் வைதீக மரபினர் இதனை கபாலம் என்றனர்.*

### பச்சை தாரா - மாரியம்மன்

*தாரா பௌத்த சமயத்தில் அமோக சித்தி எனப்படும் சுயம்பு புத்தரின் பெண் இணை ஆவாள். தாராவை வேறு பல நிறங்களில் நேபாளத்தில் இளவரசியாகக் கருதி வணங்குகின்றனர். காலம் செல்ல செல்ல தாரா வழிபாடு விரிவடைந்து பல உயரங்களைத் தொட்டது.*

*பௌத்தர் காலத்தில் இருந்த தாரா வழிபாடு இந்து சமயத்தில் இரண்டு வகையாக மாறியது. பச்சை தாரா வழிபாடு*

லலிதாசனத்தில் அமர்ந்திருக்கும் மாரியம்மன் வழிபாடாக மாறிற்று. இவள் வேளாண் தெய்வம்.. மக்களை நோய்களில் இருந்து காக்கும் காவல் தெய்வம். நோய் தீர்ப்பாள். குழந்தை வரம் தருவாள். இவள் கோயில்களில் தோல் நோய் தீர, மறு, பரு கரைய மிளகு, உப்பு, வெல்லம் காணிக்கையாக செலுத்துவர்

**ருத்ர தாரா + பிடாரி= காளியம்மன்**

இரண்டாவது வகையான ருத்ர தாரா வழிபாடு வீராசனத்தில் அமர்ந்து தலையை ஒருபுறம் சாய்த்தபடி சூலாயுதத்தைக் கொண்டிருக்கும் காளியம்மன் வழிபாடாக மாறியது. சபெரிய சூலாயுதங்கள் பிற்காலத்தில் அம்மன் அருகில் வைக்கப்பட்டன. இவர்களின் காலடியில் ஒரு ஆண் (அசுரன் அல்லது சிவன்) இப்பெண் தெய்வகளிடம் வதை பட்டுக் கிடப்பான். இவ் வழிபாட்டில் வரலாற்றுக் காலத்துக்கு முன்பிருந்த முன்பிருந்த பிடாரி வழிபாடும் இணைந்தது. மயானத்தின் அருகே கோயில் கொண்டுள்ள வக்ரகாளி, கோலவிழி அம்மன் ஆகியோர் இவ்வகை காளியம்மன் ஆவர். இவர்கள் கொலைத் தெய்வங்கள். தவறு செய்தவரைக் கருவறுப்பர். கொடூரமாகக் கொலை செய்வர். பெண்களையும் கொல்வர். வயிற்றைக் கிழித்துக் குடலை உருவிக் கொல்வர்.

ருத்ரம் என்றால் கோபம் மற்றும் ஆங்காரம். காளியம்மன் தவறு செய்தவர்களைத் தண்டிக்கும் நீதி தேவதை. காளியம்மனிடம் கருணையை எதிர்பார்க்க இயலாது. வெட்டுடையார் காளி, மடப்புரத்துக் காளி, வெக்காளி போன்றோர் தண்டனை வழங்கும் தெய்வங்கள். நீதிமன்றங்களில் சாட்சியின்றி தப்பித்த குற்றவாளிகள் கூட காளியம்மனிடம் இருந்து தப்பிக்க முடியாது.

**மருத்துவ புத்தர் - பாய்சாஜ்யா குரு**

மகாயான பௌத்தத்தில் பாய்சாஜ்யா குரு (Bhaisajyagiru) என்பவர் மருந்துக்குரிய புத்தர் ஆவார். (Medicine Buddha) என்பவர் யாக்குஷி நியோரா என்பவர் சுகமாக்கும் புத்தர் (Healing Buddha). ஆவார்.பௌத்தர்கள் மருத்துவத்துக்கு அதிக முக்கியத்துவம் வழங்கினர். தங்கள் மடாலயங்களில் மக்களுக்கும் கால்நடை

*மற்றும் பறவைகளுக்கும் இலவச மருத்துவ சேவை செய்தனர். காத்து, கருப்பு, கண் திருஷ்டி, ஏவல், பில்லி, சூன்யங்களையும் சரி செய்தனர். இதனால் மக்கள் இவர்களின் தெய்வங்களை தொடர்ந்து வேறு பெயர்களில் இன்று வரை வழிபட்டு வருகின்றனர். மாரியம்மன், காளியம்மன் கோயில்களில் மக்களின் இக்குறைகள் பல்வேறு நேர்த்திக்கடன்களால் தீர்க்கப்படுகின்றான்.*

*அம்மன் கோயில்களின் வழிபாடும் வரலாறும் அங்குக் காணப்படும் பௌத்தத் தடயங்களுடன் இந்நூலில் விளக்கப் பட்டுள்ளன. ஒவ்வொரு கட்டுரையும் இரண்டு பகுதிகளாக அமைந்துள்ளது. முதல் பகுதி அம்மன் கோயிலில் இறைக அமைப்பு, வழிபாடுகள், கதைகள், வழிபாட்டின் பலன்களை விளக்குகின்றது. அடுத்த பகுதி கோயிலின் முன் வரலாறு மற்றும் பௌத்த தடயங்களைப் பட்டியலிடுகிறது.*

**செ. ராஜேஸ்வரி**


லலிதாம்பிகை


சமயபுரம் மாரியம்மன்


சிறுவாச்சூர் மதுரகாளி


வக்ரகாளியம்மன்


மேச்சேரி பத்திரகாளி


கோலவிழி அம்மன்


கங்கை அம்மன்


நிமிஷாம்பாள்


தையல்நாயகி


படவேட்டம்மன்


திருவாலங்காட்டு காளி
நீலி


திரௌபதி அம்மன்

## நூலாசிரியர் முனைவர் செ. இராஜேஸ்வரி



முனைவர் செ. இராஜேஸ்வரி கடந்த ஆறு ஆண்டுகளில் எழுதியும், மொழிபெயர்த்தும் வெளியிட்ட நூல்களின் எண்ணிக்கை 114 ஆகும். அவை மொழிபெயர்ப்பு, சமூகப் பண்பாட்டு ஆய்வு நூல்கள், கவிதைத் திறனாய்வு நூல்கள் எம்.ஜி.ஆர். திரைப்பட ஆராய்ச்சி நூல்கள், Sangam Classics in English என்று பல தரப்பட்டவையாகும். தமிழணங்கு மற்றும் சக்தி பன்மொழி மின்னிதழ்களின் ஆசிரியர். எம்.ஜி.ஆர். மற்றும் கடவுளர் குறித்துப் பல காணொளிகளை வெளியிட்டுள்ளார்.

இவர் ஒரு மொழிபெயர்ப்பாளர், மொழியியலார், எழுத்தாளர், எம்ஜிஆர் திரைப்பட ஆய்வாளர், கல்லூரிப் பேராசிரியர், சமயப் பண்பாட்டு ஆய்வாளர், பதிப்பாளர் மொழி பெயர்ப்பியல் துறையில் முனைவர் பட்டம் பெற்றவர்.

1985 முதல் தமிழ் ஆங்கில மொழி பெயர்ப்புப் பணிகளில் ஈடுபட்டுள்ளார். பல துறை சார்ந்த பனுவல்களைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார்.

1986 முதல் சமயச் சொல் அகராதி, எபிரேயம் - தமிழ் அகராதி; கிரேக்கம் - தமிழ் அகராதி உருவாக்கத் திற்காக மக்கள் கல்வி அறக்கட்டளையின் இயக்குனர் மறைதிரு இராபின்சன் லேவி ஐயா அவர்களுடன் இணைந்து இருபது ஆண்டுகள் தீவிரமாகப் பணியாற்றினார். ஈரோடு மகளிர் கலை, அறிவியல் கல்லூரி, திருச்சி ஸ்ரீமத் ஆண்டவன் கலை, அறிவியல் கல்லூரி, மதுரை அமெரிக்கன் கல்லூரி ஆகிய கல்லூரிகளில் சில ஆண்டுகள் தமிழ் விரிவுரை யாளராகப் பணியாற்றினார்.

1993இல் ஆசியவியல் ஆய்வியல் நிறுவனத்தில் இணைப் பதிப்பாசிரியராகப் [Associate Editor] பணியாற்றினார். ஜப்பானிய

மொழியைத் தமிழில் கற்பது எளிது என்பதை அறிந்து அதற்கான நூல் உருவாக்கும் பணியில் ஜப்பானியப் பெண் யூகோஃபுகுரோயியுடன் இணைந்து செயல்பட்டார்.

2000இல் மதுரையில் அமெரிக்காவின் விஸ்கான்சின் பல்கலைக்கழக மாணவர்களுக்கு தமிழ் கற்பித்தார். வெளி நாட்டவருக்கு தமிழ் கற்பிக்கப் பாட நூல் ஒன்றை உருவாக்கினார். அரவிந்த் கண் மருத்துவமனையில் மொழி பெயர்ப்பாளராகவும் வேற்று மாநிலம் மற்றும் வெளிநாட்டு மருத்துவர்களுக்கு, தமிழ் ஆசிரியராகவும் பணியாற்றினார். அப்போது தமிழ் தெரியாத கண் மருத்துவர்களுக்குத் தமிழ் கற்பிக்க Tamil for Non-Tamils என்ற பாடநூலை உருவாக்கினார். அங்குச் செவிலியர் பயிற்சி பெறும் இளம் பெண்களுக்கு ஆங்கிலம் கற்பிக்க Easy English என்ற ஆங்கிலப் பாடநூலை உருவாக்கினார். மக்கள் கண்காணிப்பகத்தில் வெளி மாநிலத்தவருக்கு ஆங்கிலமும் வெளி நாட்டவருக்குத் தமிழும் கற்பித்தார்.

தமிழ் கற்கும் வெளிநாட்டு மாணவர் களுக்காக சென்ட்டர் ஃபார் லேங்குவேஜ் ஸ்டடீஸ் [Centre for Language Studies] என்ற பெயரில் தனி மையம் ஒன்றை அமைத்து அவர்களுக்குத் தமிழ் கற்பித்தார்.

எம்.ஜி.ஆர். பற்றி "ஒப்பனையும் ஒரிஜினலும் எம்.ஜி.ஆர். 100" என்ற தலைப்பில் விகடன்.காமில் முப்பது கட்டுரைகள் வெளியிட்டார். அதன் தொடர்ச்சியாக கனடாவில் இருந்து வரும் www.tamilauthors.com என்ற இணைய இதழில் தொடர்ந்து அறுபது கட்டுரைகள் எழுதினார். வெற்றித் திருமகன் எம்.ஜி.ஆர். என்ற பெயரில் தொடங்கும் வரிசையில் இருபத்திரண்டு (22) நூல்கள் எழுதி வெளியுட்டுள்ளார்.

**Her Book list Follows:**

**Books about MGR - His films and life (22)**

**Book on Ex-Mayor of Chennai Saithai S. Duraisamy**

23. **சென்னைப் முன்னாள் மேயர் மனித நேயச் செம்மல் சைதை சா. துரைசாமி அவர்களின் சிறப்புத் திட்டங்களும் செயல்பாடுகளும்**

## Books Translated from English to Tamil (6)

24. **இந்திய பெண்கள் சாதனைகளும், சவால்களும் - பேரா. ரீட்டாம்மா, முனைவர்.செ.இராஜேஸ்வரி** (Indian Women - Changes and Challenges (Co-Author) Nira Desai & Vibhuthi Betel) **நீரோட்டம் பதிப்பகம், மதுரை**
25. **உலக மயமாக்குதலும் நகரிய இறையியலும் - லாரி க்ரீன், பிரட்வெல் பேராயர், (இங்கிலாந்து திருச்சபை),** Theological Education through Living Literature (TELL) **வெளியீடு, அரசரடி, மதுரை,** 2004
26. Water Privatisation (for PET, Madurai)
27. Assisted reproductive technologies and it's Impact on Women (SIRD, Madurai)
28. Eco Vision and Mission
29. Bachelor's Study Materials for Social Science [IGNOU, Madurai]
30. Novell SuSe Linux Operating System Manual in Tamil

    and others...

## Poems of Muththamizh Virumbi Translated from Tamil to English (8)

31. Shade of the Flowering Tree
32. Songs of Dryness
33. Speaking with You
34. Language of Love
35. A Lady at the little gate
36. Honey Hive
37. Therapist of the Finest Art
38. Following Dusty Feet

## Books of Dr.Gnanasekaran Translated from Tamil to English (6)

39. Emerging Mallarism
40. Festival of Lord Indra

41. Role of Devendirars in Indian war of Independence (Sundaralingam)
42. Mallariyan Literature
43. Re reading of Pallu literature
44. Frontyard without My Dad (Poem)

**Tamil books on Socio Cultural Religious Studies (10)**

45. பண்பாட்டு நகர்வுகள் (தமிழ் நாட்டில் இருந்து ஜப்பானுக்கு)
46. பெண் தெய்வ வழிபாடு
47. தேவேந்திரன்
48. மருதநிலப் பெண் தெய்வங்கள்
49. இருநிலத்தில் திருமுருகன்
50. முன்னோர் வழிபாடு
51. வேளாண்மரபில் விதைப்பும் பூப்பும்
52. யானைக் கடவுள்
53. பெண் பூப்பின் புனித வழிபாடு
54. வழிபாட்டின் வேர்களைத் தேடி

**சமய வழிகாட்டி நூல்கள்**

55. சாமிகளின் சரித்திரம் (வரலாறும் வழிபாடும்)
56. விரதங்களின் விளக்கம்
57. சாமிகளின் துதிகள் (27, 54, 108 போற்றி)
58. மலைக்கோயில்கள் - முருகன் (வழிபாடும் வரலாறும்)
59. மலைக்கோயில்கள் - சிவன், விஷ்ணு (வழிபாடும் வரலாறும்)
60. அம்மன் கோயில்கள் (வழிபாடும் வரலாறும்)
61. திருமணத் திருத்தலங்கள் (வழிபாடும் வரலாறும்)
62. பிள்ளை வரம் அருளும் கோயில்கள் (வழிபாடும் வரலாறும்)

**Poetry Criticism on MuthamizhVirumbi's Poems (5)**

63. பாடுபொருளும் பாசப்பொருளும்
64. பூ மர நிழலின் களமும் காலமும்
65. "2020 தைமாதத்தில் இன்று" கவிதையில் அடிக்கருத்தியல் ஆய்வு

66. கவிதையில் காதல்
67. பயணக் கவிதைகள்

## Books on Translation Studies in Tamil (5)

68. மொழிபெயர்ப்பியல் ஆய்வு
69. கவிதை மொழிபெயர்ப்பு
70. நவீன மொழிபெயர்ப்பு உத்திகள் (Co-author)
71. மொழிபெயர்ப்பில் பெயரும் பொருளும்
72. Translating Tamil poetry

## English Poems Translated to Tamil (5)

73. எட்டுத்திக்கும் செல்வீர்
74. அவன் கடவுளுக்கு நிகரானவன்
75. செக்கச் சிவந்த ரோஜா
76. மணலும் நுரையும் - கலீல் ஜிப்ரான்
77. பாடல்கள் 14 – கலீல் ஜிப்ரான்

## Fiction (2)

78. அமராவதியின் காதல் (சிறுகதைகள்)
79. திருக்குறள் சிறுகதைகள் (பகை மாட்சி)

## கவிதைகள் (3)

80. ரோஜா மொட்டு (கவிதை சித்திரங்கள்)
81. மகிழ் பேரின்பம் (poems)
82. பொன் வேலி

## Tamil Classics in English (Selected Poems) (6)

83. Ainkurunuuru
84. Kurunthokai
85. Puranaanuuru
86. Pastoral Literature of Classic Tamil (Mullai Pattu & Mullai Kali)
87. A Classic Portrait of Ancient Madurai (Madurai - Kanchi)
88. Songs of Classic Tamil Poetess Avvai
89. The Winter's Tale in Classic Tamil (Nedu nal vaadai)

**Didactic Literature (2)**

90. Naaladiyaar

91. Aacharak Kovai

**Medievel Literature (5)**

92. A peasant with two wives (Mukoodal Pallu)

93. A Predictress from the Hill (Thiru Kutrala Kuravanji)

94. One line guidelines in Tamil

95. Madurai, a City of Prosperity (16th Century)

**திருக்குறள் ஆய்வுநூல் வரிசை (2)**

96. உலகத் தமிழர்களின் ஒரே நூல் - திருக்குறள்

97. வாழ்வியல் வழிகாட்டி - திருக்குறள்

**Sangam Classics in Modern Tamil (1)**

98. குறுந்தொகைக் கவிதைகள் (தற்காலத் தமிழில்)

**Socio Cultural Study Series (2)**

99. Lord Indra - the forgotten Deity

100. Serpent - The Primordial Deity

**Studies on Tamil Grammar(1)**

101. தமிழ் இலக்கணத்தில் வேற்றுமை உருபுகள்

**Translation of a Tamil Novel**

102. Genetic traits of Vengai anchor by Tamilmagan

**Editor**

103. Ambrosial kiss (A collection of articles on Muthamizh Virumbi's poems)

104. Love Thamizh 1 (Articles on History, Language and Literature of Tamils)

105. Love Thamizh - 2 Ancient Literature to Modern Cinema

**பதிப்பாசிரியர் - தமிழணங்கு ஆய்வு நூல் வரிசை**

106. மொழிபெயர்ப்பு நுண்ணாய்வு
107. மதுரை மூதூர்
108. எம்.ஜி.ஆர். பாடல்கள் ஆய்வு

**ஜோதிட நூல்கள்**

109. மேஷ ராசியின் சூட்சும ரகசியம்
110. ரிஷப ராசியின் சூட்சும ரகசியம்
111. நவரத்தினமும் உபரத்தினமும்
112. மிதுன ராசி சூட்சும ரகசியங்கள்
113. கடக ராசியின் சூட்சும ரகசியம்

**தமிழிலிருந்து ஆங்கிலத்திற்கு (மொழிபெயர்ப்பு)**

114. Amma (J. Jayalalitha) **(தமிழில் முனைவர் சந்திரிகா சுப்ரமணியன்)**

**இதழாசிரியர்**

- தமிழணங்கு - சமய, இலக்கிய, பண்பாட்டு மாத ஆய்விதழ் **(**2022 ஜூலை முதல்**)**
- Love Thamizh A multilingual journal for Tamils
- சக்தி **(**பெண்ணிதழ்**)**

**செ. ராஜேஸ்வரியின் நூல்கள் பற்றிய திறனாய்வுகள்**

- செ. ரா.யின் மொழிபெயர்ப்புத் திறன்
- செ. ரா.யின் சங்க இலக்கிய மொழிபெயர்ப்பு

**சத்யபிரபா (செ. ரா) கவிதைகள் பற்றிய திறனாய்வு**

- சத்யபிரபாவின் கவியின்பம் - இ சக்தி

**Mega Collection**

- Tamil Classic Poems of Love and Life (Ainkurunuru, Kurunthokai and Purananuru)
- ஆங்கிலத் தேன் கவிதைகள்
- பெண் தெய்வ வழிபாடு - தோற்றமும் வரலாறும்
- The Madurai

**Awards**

1. Best Translator Award from Nerunji Literary Movement, Trichy
2. Best Women Achiever Award, L. D. C. Madurai
3. Best Translator Award, Government of Tamil Nadu. 2022
4. Ilakkiya Viruthu, Muthamizh Sangam, Tiruppur
5. Sakthi Award, Makkal Maa manram, Tiruppur
6. Kalaimaamani Prof. Dr. Gnanasekaran Ilakkiya Viruthu, Coimbatore
7. குறள்பணிச் செம்மல் விருது, தஞ்சைத் தமிழ் பல்கலைக்கழகம் & அகழ் அமைப்பு (பெரம்பலூர்).
8. தமிழக அரசின் சிறந்த பதிப்பகம் விருது – 2023 (சந்திரோதயம் பதிப்பகம்)
9. சாதனை திலகம் - திருவள்ளுவர் இலக்கிய மன்றம் பொன் விழா வானுவம்பேட்டை, சென்னை, 2025.
10. அறிவு மலர், மயிலைத் திருவள்ளுவர் தமிழ்ச் சங்கம், சென்னை, 2025



# உள்ளடக்கம்

# 1. லலிதாம்பிகை

**ல**லிதா சகஸ்ரநாமத்திற்குரிய அம்பிகை லலிதாம்பிகை ஆவாள். இவள் சாந்த சொரூபிணி, சௌந்தர நாயகி. இவள் ஸ்ரீ சக்கர பீடத்தில் ராஜ சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கின்றாள், இவள் அபய வரத ஹஸ்த முத்திரையுடன் வலது காலை மடித்து இடது காலைத் தொங்கவிட்டு காட்சி தருகின்ற ஊர் திருமீயச்சூர். இங்கு மேகநாதர் கோயிலில் இவள் தனிச் சன்னதியில் எழுந்தருளி உள்ளாள்.

## தேவாரத் திருத்தலம்

திருமீயச்சூர் பாடல் பெற்ற ஸ்தலமாகும். காவிரியின் தென்கரைத் தலங்களில் 56 ஆவது திருத்தலம். திருமீயச்சூர்



*திருவாரூர் மாவட்டத்தில் அமைந்துள்ளது. இறைவனின் பெயர் மேகநாதன். வில்வம் இங்குத் தலவிருட்சமாக விளங்குகின்றது. சூரிய பகவான் ஈஸ்வரனையும் அம்பாளையும் வணங்கி அருள் பெற்ற இடம் என்பதனால் இங்குள்ள தீர்த்தம் சூரிய புஷ்கரணி என்று அழைக்கப்படுகின்றது. விமானத்தின் அமைப்பு கஜபிருஷ்டம் ஆகும்.*

*திருமீயச்சூரில் இளங்கோயில், பழங்கோயில் என்று இரண்டு கோயில்கள் உண்டு. இவை இரண்டிற்கும் இராஜேந்திர சோழனும் செம்பியன் மாதேவியும் திருப்பணிகள் செய்ய நிவந்தம் அளித்துள்ளனர். தேவாரப் பாடல் பெற்ற 274 சிவாலயங்களில் இத்திருத்தலம் 119 ஆவது திருத்தலமாகும்.*

**மஹா பெரியவர் தங்கிய தலம்**

*லலிதாம்பிகையை வணங்க இங்கு வந்த மகா பெரியவர் அவளது அருளிலும் அழகிலும் மயங்கி இங்கிருந்து செல்லவே மனமின்றி கூடுதல் காலம் தங்கி இருந்த சிறப்பைப் பெற்ற தலம்.*





**மேகநாத சுவாமி என்ற முயற்சிநாதர் லிங்க ரூபத்தில் அருள் தருதல்**

## சாமியும் அம்மனும்

இக்கோயிலின் ராஜகோபுரம் கிழக்கு நோக்கி உள்ளது. கொடிமரம், பலி பீடம், நந்தி ஆகியவைகளைக் கடந்து உள்ளே சென்றால் மற்றொரு கோபுரம் காணப்படும். எதிரே உள்ள திருச்சுற்றில் விஸ்வநாதருக்கு என்று தனிச் சன்னதி உண்டு. கோயிலின் வலப்பக்கம் திரும்பினால் லலிதாம்பிகை தனிச் சன்னதி கொண்டிருப்பாள். இந்த இரண்டாவது கோபுரத்தையும் கடந்து உள்ளே சென்றால் கருவறையில் மேகநாத சுவாமி என்ற முயற்சிநாதர் லிங்க ரூபத்தில் அருள் பாலிப்பார்.

## திருச்சுற்றுத் தெய்வங்கள்

கருவறைக் கோஷ்டத்தில் நர்த்தன கணபதி, ஷேத்தர புராணேஸ்வரர், தட்சிணாமூர்த்தி, லிங்கோத்பவர், பிரம்மா, சந்திரசேகரன், துர்க்கை ரிஷபாரூடர் ஆகியோர் காணப்படுகின்றனர். கோயிலைச் சுற்றியுள்ள திருச்சுற்றில் விநாயகர் சன்னதி உள்ளது.

வள்ளி தெய்வானையுடன் கூடிய சுப்பிரமணியர் தனி சன்னதி கொண்டுள்ளார். இவை தவிர சித்தி விநாயகரும், மகாலட்சுமியும்



**வள்ளி தெய்வானையுடன் சுப்பிரமணியர் சன்னதி**

திருச்சுற்றில் காணப்படுகின்றனர். சைவ சமயக் குரவர் நால்வரும் உள்ளனர்.

## லிங்கங்கள் எட்டு

திருமீயச்சூரில் எட்டு லிங்கங்கள் உண்டு. அவை இந்திரலிங்கம், அக்கினி லிங்கம், எமலிங்கம், அகத்திய லிங்கம், குபேர லிங்கம், ஈசான லிங்கம், பிரித்வி லிங்கம் ஆகியன.

## சூரியனின் பாவ விமோசனம்

சூரியனின் தேரோட்டியான அருணன் மிகப்பெரிய சிவபக்தன். அவன் தினமும் சிவனுக்கும் பார்வதிக்கும் பூஜை செய்யாமல் சூரியனது தேரில் ஏறி அமர மாட்டான். அவ்வாறு அவன் தினமும் சிவ பூஜை செய்வதைக் கண்டு எரிச்சலுற்ற சூரிய பகவான் 'நீ செய்த பாவம்தானே ஊனமாகப் பிறந்திருக்கிறாய். இப்போது நீ சிவபூஜை செய்தால் மட்டும் உன் ஊனம் போய்விடுமா? உனக்குப் புண்ணியம் சேர்ந்து விடுமா? என்று கோபமாகக் கேட்டான். இவனது கேலியான சொற்களைக் கேட்டு மனம் வருந்திய அருணன் இன்னும் கூடுதலாக சிவபூஜை செய்தான். சிவபெருமான் அருணனின்பால் இரக்கம் கொண்டு அவனைக் கேலி செய்த சூரியனைத் தண்டித்தார். அதனால் அவன் ஒளி இழந்து இருண்டு கறுத்துப் போனான்.

*ஊனமுற்றவனைக் கேலி செய்த சூரியன் தன் தவறை உணர்ந்து சிவபெருமானிடம் சாப விமோசனம் வேண்டினான். திருமீயச்சூரில் வந்து தங்கி ஏழு மாதம் தன்னை பூஜித்தால் சாப விமோசனம் கிடைக்கும் என்றார்.*

*சூரியன் திருமீயச்சூர் வந்து குளம் வெட்டி (சூரிய புஷ்கரிணி) தினமும் அதில் குளித்து சிவ பூஜை செய்து பாவ விமோசனம் பெற்றான். மீண்டும் தன் ஒளி பெற்று அருணனின் தேரில் பிரகாசத்துடன் வானில் வலம் வந்தான்.*

**லலிதா ஸஹஸ்ரநாமம்**

*திருமீயச்சூரில் ஹயக்ரீவர் அகத்திய முனிவருக்கு லலிதா சகஸ்ரநாமத்தை உபதேசித்தார். தேவியின் திருவாயில் இருந்து உதித்த வஸனி எப்போதும் வாக் தேவதைகள் தேவியைப் போற்றித் துதித்த நாமங்கள் லலிதா சஹஸ்ரநாமம் என்று பெயர் பெற்றன. இக் கோயிலுக்கு வந்து லலிதா சகஸ்ர நாமத்தைச் சொன்னால் வாழ்வில் எல்லா நன்மைகளும் கிடைக்கும். லலிதா சகஸ்ரநாமத்தைக் கேட்ட அகத்தியர் தானும் அம்பாளின் மீது ஒரு ஸ்தோத்திரம் பாடவேண்டும் என்று விரும்பி ஸ்ரீ லலிதா நவரத்தின மாலையை இயற்றினார். இதன் மொழிநடை காலத்தால் மிக பிந்தியது. எனவே இதனைப் பிற்காலத்தவர் யாரோ எழுதி அகத்தியர் பெயரைச் சூட்டியிருக்கலாம். இதனையும்*



**சப்த மாதாக்கள் பூஜித்த லிங்கங்கள்**



**ராஜ சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கும் லலிதாம்பிகா அம்மன்**

தினமும் படித்து வர எல்லா இன்னல்களும் தீர்ந்து நன்மைகள் நடைபெறும்.

## லலிதாசனம்

லலிதாசனம் என்பது (royal posture) அரசர், அரசிகள் அமரும் முறை ஆகும். லலிதாம்பிகா உட்கார்ந்திருக்கும் முறை (pose) காரணமாகவே அவள் ராஜ சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கிறாள் என்று சொல்கின்றனர். பௌத்தப் பெண் தெய்வங்களில் தாரா (எண் 60), வசு தாரா (எண்கள் 63,64,65) போன்றோர் லலிதாசனத்தில் அமர்ந்திருக்கும் செப்புத் திருமேனிகள் நாகப்பட்டினத்தில் கிடைத்தன. அவை நாகப்பட்டினத்தில் இருந்து கொண்டு வரப்பட்டு சென்னை மியூசியத்தில் வைக்கப்பட்டுள்ளன. பௌத்த கோயில்களில் லலிதாசனத்தில் அமர்ந்திருந்த தாரா சைவப் பேரெழுச்சிக்குப் பின்பு லலிதாம்பிகா என்ற பெயரில் வணங்கப்படுகிறாள். மேகநாதன், முயற்சி நாதருக்குரிய கதைகள் வட மொழிப் புராணங்களில் இருந்து இங்குக் கொண்டு

வரப்பட்டன. லலிதாசனத்தில் உள்ள தனிப் பெண் தெய்வம் கிடைப்பது மிக மிக அரிது. அவ்வாறு கிடைத்திருக்கும் அரிய தெய்வம் திருமீயச்சூரில் உள்ள லலிதாம்பிகை ஆவாள்.

குலசேகரப்பட்டணம் (முத்தாரம்மன்) புதுக்கோட்டை (7ஆம் நூற்றாண்டு குன்றாண்டார் குடவரைக் கோயில்) போன்ற ஊர்களில் ஜோடியாக லலிதாசனத்தில் அமர்ந்திருக்கும் தெய்வங்கள் கிடைத்துள்ளன. திருமீயச்சூரில் அம்பாள் லலிதாசனத்தில் தனிச் சன்னதி கொண்டுள்ளாள். இது வேறெங்கும் காணக் கிடைக்காத திருக்காட்சி ஆகும்.

சேத்திர புராணேஸ்வரர் திருமீயச்சூர் கோயிலின் கருவறை கோஷ்டத்தில் உள்ள சேத்திர புரானேஸ்வரர் சிற்பம் சிவம் பார்வதியின் கோபம் தணிவிக்கும் கோலத்தில் உள்ளது. இச் சேத்திர புராணேஸ்வரர் சிற்பத்திற்கு சுவையான ஒரு கதை சொல்லப்படுகிறது.

திருமீயச்சூரில் ஏழு மாதங்கள் சிவ பூஜை செய்தும் சாபம் நீங்காத கருத்த சூரியன் சிவபெருமானும் பார்வதியும் தனித்திருந்த வேளையில் அவர்கள் முன் வந்தான். கரிய உருவில்




**சூரியபகவான் வெட்டிய சூரிய புஷ்கரிணி குளம்**




**சேத்திர புரானேஸ்வரர் சிற்பம் சிவன் பார்வதியின் கோபம் தணிவிக்கும் கோலத்தில்**

ஒருவன் திடீரென வந்ததும் பார்வதி கோபமுற்று அவனை சபிக்க போனாள். அப்போது சிவபெருமான் "நான் அவனுக்குக் கொடுத்த சாபகாலம் ஏழு மாதம் முடிந்து விட்டது. அவன் சாபம் முடிந்தும் விமோசனம் கிடைக்கவில்லையே என்று என்னைத் தேடி வந்திருக்கின்றான். இவ்வேளையில் நீ அவன் மீது கோபம் கொண்டு அவனைச் சபிக்க போகிறாய். வேண்டாம். சாந்தமாக இரு" என்று கெஞ்சலாகக் கூறினார். 'அவன் தன் மனக்குறையை என்னிடம் சொல்ல வந்திருக்கின்றான். நீ அவனை கோபித்து விரட்டாதே. சாந்தமாக இரு' என்று பார்வதியின் நாடியைத் தொட்டுக் கொஞ்சலாக கூறும் காட்சி சேத்திர புராணேஸ்வரர் என்ற பெயரில் சிற்பமாக செதுக்கப்பட்டுள்ளது.

## அம்பாளின் கோப தாபம்

*சேத்திர புராணேஸ்வரர் சிற்பத்தில் அந்தரங்க வேளையில் அசடு போல் புகுந்த சூரியனால் அம்பாளுக்கு ஏற்பட்ட உணர்ச்சிக் குழப்பத்தைத் தெளிவாகக் காணலாம். சிவபெருமான் பார்வதியின் நாடியைத் தொட்டுக் கெஞ்சுவதால் சிவன் பக்கம் உள்ள கண்ணில் தாபமும் அடுத்த பக்கம் உள்ள கண்ணில் கோபமும் தெரியும். அழகான சிற்பத்துக்குக் காதலும் மோதலும் கலந்த அருமையான காரணம் சொல்லப்படுகிறது.*

## சூரியக் கதிர் வணக்கம்

*தமிழ்நாட்டில் சிற்பக் கலைஞர்கள் ஒவ்வொரு நாளும் சூரியனின் கதிரொளி விழுமிடங்களைச் சரியாகக் கணக்கிடத் தெரிந்தவர்கள். அதனால் கோயில்களில் உள்ள சிவலிங்கத்தின் மீது குறிப்பிட்ட நாட்களில் கதிரொளி விழும் வகையில் கருவறையையும் சிவலிங்கத்தையும் அமைத்தனர். இதற்கு சூரியனின் நமஸ்காரம் என்று பெயர் சூட்டினர். ஆனால் இக்காலத்தில் கன்னியாகுமரியில் கட்டிய காந்தி மண்டபத்தில் அவரது பிறந்தநாள் அன்று சூரிய ஒளி அவர் சிலையின் மீது விழுவது போல் கட்டப்பட்டுள்ளது. இது கட்டிடக் கலையின் சிறப்பை உணர்த்துகிறது. இதனைச் சூரியன் காந்தியடிகளை நமஸ்காரம் செய்வதாகக் கருதக் கூடாது.*

*இக்கோயிலில் ஒவ்வொரு ஆண்டும் சித்திரை மாதம் 21 ஆம் நாளிலிருந்து 27 ஆம் நாள் வரை சூரியன் தன்னுடைய கதிர்களால் சிவலிங்கத்தைத் தொட்டுத் தழுவிச் செல்கிறது. இதனைச் சிவபெருமானால் பாவ விமோசனம் பெற்ற சூரிய பகவான் சிவலிங்கத்தைத் தன் ஒளிக் கரங்களால் ஆராதிக்கின்றார் என்கின்றனர்.*

## பரிகாரத்தலம்

*சேத்திர புராணேஸ்வரர் சிற்பம் இங்கிருப்பதால் பிரிந்திருக்கும் கணவன் மனைவிமார் இத்தலத்திற்கு வந்து வணங்கிச் சென்றால் அவர்கள் மீண்டும் இணைந்து இன்பமாக வாழ்வது உறுதி. கால் இல்லாத அருணனின் மனக்குறையைத் தீர்த்து வைத்த இறைவன் எழுந்தருளிய தலம் என்பதால்*




**சூரியபகவானிற்கு தனிச் சன்னதி**

*ஊனமுற்றோர் தங்களின் மனக்குறைகளை இறைவனிடம் முறையிட்டால் அவர்களின் மனக்குறை தீரும்.*

*கிரக தோஷங்களால் ஆயுள் கண்டம் உள்ளவர்கள் இங்கு வந்து வழிபட்டால் தீர்க்காயுள் கிடைக்கும். இங்குப் பிரசாதமாகத் தாமரை இலையில் பிரண்டை சாதத்தை வைத்து தருவார்கள். இப் பிரசாதம் பல வகை நோயையும் தீர்க்க வல்லது.*

## தங்கக் கொலுசு

*பொதுவாக தமிழ்நாட்டில் பெண்கள் இடுப்புக்குக் கீழே தங்க நகைகள் அணிவதில்லை. ஆந்திராவை சேர்ந்த நடிகையர் திலகம் சாவித்திரி தங்கத்தால் கொலுசு செய்து அணிந்ததால் செல்வத்தை இழந்து ஆரோக்கியத்தை இழந்து நோயிலும் பாயிலும் பல காலம் கிடந்து உருத் தெரியாமல் இறந்து போனார் என்பர். மனிதர்கள் தங்கத்தை இடுப்புக்குக் கீழே அணிந்தால் அது மகாலட்சுமியை அவமதிப்பதாக ஐதீகம். இங்கு தெய்வத் திருமகள் லலிதாம் பிகைக்கு தங்கக் கொலுசு சாத்தி இருப்பது ஒரு விசேஷமாகும்.*

ஒரு பக்தையின் கனவில் அம்பிகை தோன்றி ‘எனக்குத் தங்கக் கொலுசு சாத்துங்கள்’ என்று கூறியதும் அந்தப் பக்தை கோயில் குருக்களிடம் வந்து தெரிவித்தாள். கோயில் ஆட்கள் தங்கக் கொலுசு அணிவிக்க அம்மன் சிற்பத்தில் ஏதேனும் வாய்ப்பு உண்டா என்று ஆராய்ந்தனர். ஒன்றும் வாய்ப்பிருப்பதாகத் தெரியவில்லை. பல நாட்கள் பல ஆசாரிகள் சிற்ப சாத்திர வல்லுநர்கள் வந்து தேவியின் சிற்பத்தை ஆராய்ந்து பார்த்தார்கள். இவ்வாறு மிகவும் சிரமப்பட்டு ஆராய்ந்ததில் தேவியின் பாதங்களில் கொலுசு மாட்டுவதற்குரிய துவாரம் அடைபட்டு இருந்தது கண்டுபிடிக்கப்பட்டது. துவாரம் தெரியாததால் இத்தனை ஆண்டுகளும் கொலுசு மாட்டவில்லை. பின்பு அவ் அடைப்பை நீக்கிவிட்டு அதன் வழியாக கொலுசுக் கம்பியை உள்ளே விட்டு மாட்டினார்கள். இப்போது தேவி தங்கக் கொலுசுடன் காட்சியளிக்கின்றாள்.



**அம்பிகை தங்கக்கொலுசுடன் அருள்பாலித்தல்**

## நல்ல குமாரனைப் பெற

காசிப முனிவருக்கு கர்த்ரு, வினதா என்று இரண்டு மனைவிமார் உண்டு. இருவரும் சிவபெருமானை நோக்கி தமக்கு நல்ல குழந்தைகள் பிறக்க வேண்டும் என்று நீண்ட காலம் வழிபட்டு வந்தனர். சிவபெருமான் ஒருநாள் அவர்களுக்குக் காட்சி அளித்து இருவர் கையிலும் ஆளுக்கு ஒரு முட்டையைக்

*கொடுத்தார். 'முட்டை தானாக உடையும் வரை நீங்கள் அதனை ஒன்றும் செய்யக்கூடாது. முட்டையிலிருந்து உங்களுக்கு நல்ல மகன் பிறப்பான்' என்று கூறினார்.*

### கருடன் பிறந்தான்

*ஒரு வருட காலம் பூஜித்து வந்த கர்த்ரூவின் முட்டை யிலிருந்து ஒரு பறவை வெளியே வந்தது. உடனே அவள் சிவபெருமானை நோக்கி வணங்கி 'ஐயனே எனக்குக் கொடுத்த அண்டத்தில் இருந்து பட்சி வந்திருக்கிறதே. மனிதன் வர வில்லையே' என்று அழுதபடி கேட்டாள். அதற்கு சிவபெருமான் 'இது சாதாரண பட்சி அல்ல. கருட பட்சி. கருடனே பெருமாளின் வாகனம் ஆவார். கருட தரிசனம் புண்ணிய பலன் தரும்' என்று கூறினார். அவளும் மகிழ்ச்சி அடைந்தாள்.*

### அருணன் பிறந்தான்

*கத்ருவுக்குப் பறவைக் குழந்தை பிறந்ததை அறிந்த வினதா தன்னுடைய முட்டையில் என்ன இருக்கும் என்ற ஆர்வத்தின் காரணமாக அதை உடைத்துப் பார்த்தாள். அதற்குள் இருந்து பாதி வளர்ந்த ஒரு குழந்தை வெளியே வந்தது. குழந்தை இடுப்பு வரை தான் வளர்ந்திருந்தது. இடுப்புக்குக் கீழே கால்கள் வளர்வதற்குள் அவள் முட்டையை உடைத்து விட்டாள். ஐயகோ இப்படி ஆகிவிட்டதே இன்னும் சற்று பொறுத்திருந்தால் கால்களும் வளர்ந்து இருக்குமே இப்படி செய்து விட்டேனே என்று அழுது சிவபெருமானிடம் முறையிட்டாள். சிவபெருமான் 'அஞ்சாதே. இவனும் சத் புத்திரனாகத்தான் விளங்குவான். இவன் சூரிய பகவானின் தேரை ஓட்டும் தேரோட்டியாக வருவான். சூரிய உதயத்திற்கு முன்பே இவனுடைய அருணோதயம் நிகழும். உலகமே அருணனை வழங்கிய பின்பு தான் சூரியனை வணங்கும் இவனும் சத் புத்திரனே என்று கூறினார்' அவளும் தன் மகனை அன்புடன் வளர்த்து வந்தாள்.*

*இக்கதைகள் வடநாட்டில் ஏழாம் நூற்றாண்டுக்குப் பிறகு எழுதப்பட்ட புராணக் கதைகள் ஆகும். மருத்துவ சேவை, ஆழ்நிலை தியானம், தற்காப்புக் கலை போன்றவை நடைபெற்ற பௌத்த மடாலயங்கள் சிவன் கோயிலாகிய போது ஒவ்வொரு*

சிவத்தலத்துக்கு ஒரு புதிய ஸ்தல புராணம் எழுதப்பட்டது. அதில் வட நாட்டுக் கதைகள் தமிழ்மயமாயின. அவலோக்திச்வரர் அகத்திய முனிவர் ஆனார். பிரமனும் இந்திரனும் சபிக்கப்பட்டவர் ஆயினர். சாமியின் பெயரும் கதையும் மாறினாலும் மக்களின் பழைய வழிபாட்டு நம்பிக்கைகள் அப்படியே தொடர்ந்தன. அதன்படியே திருமீயச்சூரில் கோயில் கொண்டுள்ள இறைவனை வணங்கினால் நல்ல புதல்வரைப் பெறலாம். அவர்கள் உலகம் போற்றும் உத்தமராக விளங்குவது உறுதி.

## பௌர்ணமி பூஜை

சிவபெருமானுக்கு அமாவாசையும் சக்திக்குப் பௌர்ணமியும் பூஜைக்கு உகந்த நாட்களாகும். இங்கு லலிதாம்பிகைக்கு பௌர்ணமிப் பூஜை பிரசித்தம். லலிதாம்பிகைக்கு மாசி மகம் நட்சத்திரத்தில் பௌர்ணமி அன்று சிறப்பு வழிபாடுகள் செய்யப்படும். அன்று அந்த அர்ச்சனையில் கலந்து கொள்பவர்கள் சகல நன்மைகளும் அடைவார்கள்.




**மகாவிஷ்ணு சிற்பம்**

அந்நாளை அம்பாளின் பிறந்த நாளாகக் கருதியும் வழிபடுகின்றனர். அன்று அகத்தியர் அழகிய தமிழில் அருளிய ஸ்ரீ லலிதா நவரத்தின மாலையைப் பலரும் பாராயணம் செய்து சொல்வதைக் கேட்கலாம். இதனை வீட்டிலும் பாராயணம் செய்து தினமும் சொல்லி வரலாம். இதனால் சகல சௌபாக்கியங்களும் கிட்டும்.

### பிரண்டை சாதம் - நோய் நிவாரணம்

திருமீயச்சூரில் கோயில் பௌத்த சமயம் செல்வாக்குப் பெற்றிருந்த காலத்தில் மருத்துவ சேவைக்கான திருத்தலமாக இருந்தது. கௌதம் புத்தருக்குத் திருமுழுக்குச் செய்தவன் இந்திரன் என்பதால் பௌத்தர்கள் அவனைத் தலைமைத் தெய்வமாகப் போற்றினர். இன்றைக்கு லிங்கம் எனப்படும் கந்து இந்திரனின் சின்னமாக இடம்பெற்றது. அவன் எலும்புக்கு உரியவன். அவனது ஆயுதம் எனப்பட்டது முதுகெலும்பு. அதன் உறுதி (வஜ்ரம் - வைரம்) காரணமாக வஜ்ராயதம் என்று அழைக்கப்பட்டது. எலும்புக்கு உறுதி தரும் பிரண்டை (வஜ்ரவல்லி) அவனுக்குரிய




**திருமீயச்சூரில் கோயிலில் காணப்படும் பிரமன் சிற்பம்**



**அம்மன் பௌர்ணமி பூஜை அன்று மயில் வாகனத்தில் பவனி வருதல்**

*மூலிகை ஆகும். பிரண்டை சாதம் அன்றையக் கோயில்களில் வழங்கப்பட்ட அன்னதானம் ஆகும் அதுவே இன்றைக்கும் இங்கே பிரசாதமாக வழங்கப்பட்டு வருகிறது.*

## பிறவி நோய் தீர அன்னதானம்

*தாமரை இலைகளில் சங்கு புஷ்பத்தை வைத்து சதய நட்சத்திரத்தில் சிவபெருமானுக்குப் பூஜை செய்து வந்தால் பெண் வழியே, தாயின் வழியே வந்த ஜென்ம நோய்கள் விலகும். சங்கு புஷ்பம் (Clitoria / Clitero Ternatea) தாயின் கருவாயைக் குறிப்பதாகும். அதே தாமரை இலையில் அன்னம் படைத்து ஏழைகளுக்கு அன்னதானம் செய்ய வேண்டும் அப்போது தன்னைப் பிடித்திருக்கும் பிறவி நோயிலிருந்து (genetic disease / familial disease) விடுதலை கிடைக்கும்.*

## தீர்க்காயுள் பெற

*லலிதாம்பிகா சிவ பக்தர்கள் தன் குழந்தைக்கு ஆயுஷ் ஹோமம், தங்களுக்கு சஷ்டியப்த பூர்த்தி, சதாபிஷேகம் போன்ற ஆயுள் விருத்திக்கான பூஜைகளை யாகங்களைச் செய்கின்றனர்.*



# 2. சமயபுரம் மாரியம்மன்

*திருச்சிக்கு வடக்கே 15 கிலோ மீட்டர் தொலைவில் சமயபுரத்தில் எழுந்தருளியிருக்கும் மாரியம்மன் சர்வ வல்லமை படைத்தவளாக நோய் தீர்க்கும் தாயாக காவல் காக்கும் கடவுளாக கோடிக்கணக்கான பக்தர்களால் வணங்கப் படுகின்றாள். சமயபுரம் கொள்ளிடம் நதிக்கு வடக்கே பதினோரு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. கண்ணனூர், கண்ணபுரம், விக்ரமபுரம், மாகாளிபுரம் என்ற பல பெயர்கள் இவ்வூருக்கு உண்டு. கண்ணனூர் ஹொய்சள மன்னன் வீர சோமேஸ்வரன் ஆட்சியில் தலைநகரமாக விளங்கிற்று. இவ்வூரில் செல்லாயி அம்மன் கோயில், உஜ்ஜயினி மாகாளியம்மன் கோயில், போஜிஸ்வரன் கோயில் ஆகியவை உள்ளன. இவை எல்லாவற்றையும் விட மாரியம்மன் கோயில் மிகுந்த சிறப்பும் செல்வாக்கும் பெற்றுள்ளது.*

### பிறந்த வீட்டுச் சீர்

*மாரியம்மன் ஆண்டுதோறும் தை பூசத்தன்று காவிரி நதிக்கரைக்குப் சென்று தன் தமையனைச் சந்திப்பாள். ஸ்ரீரங்கத்தில் இருந்து ரங்கநாதர் தங்கைக்கு அலங்காரச்சீர் கொண்டு வந்து கொடுப்பார். அன்றைக்கு ஸ்ரீரங்கம் ஊரில் இருக்கும் குடும்பங்கள் திருமணம் செய்து கொடுத்த தங்கள் மகள்களுக்கு சீர் கொண்டு போய் கொடுப்பார்கள். தைப்பூசத்திற்கு முன்பு பத்து நாள் திருவிழா நடக்கும் தைப்பூசம் அன்று கண்ணாடிப் பல்லக்கில் அம்மன் புறப்பட்டு வட காவிரிக்கு வந்து திருவரங்கநாதரிடம் சீர் பெற்று இரவு முழுக்க அங்கேயே ஆற்றங்கரையில் தங்கியிருந்து பின்பு அதிகாலையில் தன்*



**திருவரங்கநாதரிடமிருந்து அம்மனுக்கு சீர் கொண்டு வரும் நிகழ்ச்சி**

*கோயிலுக்கு வருவாள். அன்று விடிய விடிய மக்கள் கூட்டம் காவிரி நதிக்கரையில் அம்மனைப் பார்க்க வரும். பக்தர்கள் கட்டுச் சோறு கட்டிக் கொண்டு வந்து குடும்பத்தோடு தை மாத முழு நிலா அன்று நிலவின் ஒளியை ரசித்து பக்தி மார்க்கத்தில் மூழ்கித் திளைத்து வீடு திரும்புவார்கள்.*

## புலம்பெயர்ந்த அம்மன்

*ஆதியில் மாரியம்மன் வைஷ்ணவி தேவியாக ஸ்ரீரெங்கத்தில் இருந்தாள். அதன் உக்கிரம் தாங்க இயலாமல் அவளை அங்கிருந்து அகற்ற முடிவு செயதனர். இப்போது இனாம் மாரியம்மன் என்று அழைக்கும் இடத்தில் கொண்டு வந்து வைத்து இளைப்பாறினர். பின்பு அங்கிருந்து தற்போது கோயில் கொண்டுள்ள இடத்தில் கொண்டு வந்து பிரதிஷ்டை செய்துள்ளனர்.*

## கோயில் வரலாறு

*விஜயநகர மன்னன் இங்குப் படையெடுத்து வரும்போது கண்ணனூரில் எழுந்தருளியிருக்கும் அம்மனை வணங்கி இப்போரில் வெற்றி பெற்றால் அம்மையே உனக்குப் பெரிய கோயில் கட்டுவேன் என்று வேண்டிக் கொண்டான். அவன் வெற்றி பெற்றதும் அவனது பிரதிநிதியாகத் திருச்சியை ஆட்சி செய்து வந்த விஜய ரங்க சொக்கநாதனைக் கொண்டு 1706 இல்*

அம்மனுக்குப் பெரிய கோயிலைக் கட்டினார். கண்ணனூர் அம்மன் காலப்போக்கில் சமயபுரம் மாரியம்மன் ஆகிவிட்டாள்.

## அம்மனின் தோற்றம்

மாரியம்மன் சிலை சுதையினாலும் மூலிகையினாலும் ஆனது. எனவே இதற்கு அபிஷேகம் கிடையாது. இங்கு மாரியம்மன் எட்டு கைகளும் சர்ப்பக் குடையும் காலில் அசுரர்களை மிதித்த படியும் காட்சியளிக்கின்றாள். அம்மன் கோபமாக இல்லாமல் அமைதி தவழும் முகத்துடன் விளங்குகின்றாள். ஒரு காலை மடித்து ஒரு காலைத் தொங்கவிட்டு இலிதாசனத்தில் அரசியாக வீற்றிருக்கின்றாள். தலைக்கு மேலே ஐந்து தலை நாகம் குடை விரித்து இருக்கின்றது. எட்டு கைகளிலும் கத்தி, உடுக்கை, தாமரை மலர், திரிசூலம், கபாலம், பாசம், காண்டீபம், காண்டாமணி ஆகியவற்றை ஏந்தி இருக்கின்றாள். இச்சிலை கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. உற்சவ மூர்த்திக்கு அபிஷேகங்கள் உண்டு. 1991 ஆம் ஆண்டு உற்சவர் சிலையை ஜி பாலமுருகன் ஜி முரளி குமார் என்ற சகோதரர்கள் தானமாக வழங்கினர்





**குழந்தைப் பேறு கேட்டு தொட்டில் கட்டியிருக்கும் ஸ்தலம்**

## நேர்த்திக்கடன்

*சமயபுரத்தில் மாவிளக்கு எடுத்தல், தீச்சட்டி எடுத்தல் போன்ற அம்மனுக்குரிய நேர்த்திக்கடன்கள் அதிக எண்ணிக்கையில் நிறைவேற்றப்படுகின்றன.*

*சிலர் பச்சை மூங்கிலில் மஞ்சள் துணியில் தூளி கட்டி அதில் குழந்தையைப் படுக்க வைத்து கோயிலை மூன்று சுற்று சுற்றி வருகின்றனர். குழந்தைக்கு நோய் சுகமாக வேண்டும் என்று வேண்டிக் கொண்டவர்கள் இத்தகைய நேர்ச்சையை செய்கின்றனர். சமயபுரம் அம்மனை வேண்டிக் கொண்டால் அறுவை சிகிச்சைகள் தவிர்க்கப்பட்டு விடும். நோய் குணமாகும் என்று நம்பிக்கை நெடுங்காலமாக நிலவுகின்றது.*

*தலைமுடி காணிக்கை அளிப்பவர்கள் இங்கு அதிகம். ஆண், பெண் வேறுபாடின்றி அம்மனுக்குத் தங்கள் தலை முடியைக் காணிக்கை ஆக்குகின்றனர். குறிப்பிட்ட சில குடும்பத்தினர் தொடர்ந்து முடி நீக்கும் இத்திருப்பணியில் ஈடுபட்டுள்ளனர்.*

## வேம்பின் சிறப்பு

*சமயபுரத்தில் தலவிருட்சமாக வேப்பமரம் இருக்கின்றது. இவ்வேப்ப மரத்தில் பெண்கள் தங்கள் முந்தானையைக் கிழித்து*

ஒரு கல்லை வைத்து குழந்தை தொட்டில் போல கட்டி விடுகின்றனர். குழந்தைப் பேறு இல்லாதவர்கள் இதை ஒரு நேர்ச்சையாகச் செய்து அம்மனை வேண்டிக் கொள்கின்றனர் குழந்தை பிறந்ததும் இதை மரத்திலிருந்து நீக்கி விடுகின்றனர். மாங்கல்ய பேறு வேண்டுவோர் மஞ்சள் கயிறு காட்டுகின்றனர்.

தீர்த்தமாக மாரித் தீர்த்தம் இருக்கின்றது. ஆடி வெள்ளிகளில் இங்கு நிறைய பக்தர்கள் வந்து இறைவியை வணங்கிச் செல்கின்றனர்.

### சித்திரைத் தேர்

சித்திரையில் தேர்த் திருவிழா நடைபெறுகின்றது. சித்திரை மாசம் தேர்த் திருவிழாவின்போது திருவானைக்காவல் அகிலாண்டேஸ்வரி கோயிலில் இருந்து அம்மனுக்குப் பிரசாதம் கொண்டு வரப்படுகின்றது.

### பச்சைப் பட்டினி விரதம்

சமயபுரத்தில் முக்கியமான நிகழ்வு அம்மன் உலக நன்மைக்காக பட்டினி கிடந்து விரதம் இருக்கும் நிகழ்வாகும். மாசிக் கடைசி ஞாயிறு அன்று தொடங்கி பங்குனிக் கடைசி ஞாயிறு வரை அம்மன் விரதம் இருக்கும் நாட்களாகும். அந்தக் காலங்களில் அம்மனுக்கு நைவேத்தியம் கிடையாது. அவள் உலக நன்மைக்காக விரதம் இருப்பதால் அவளுக்கு இளநீர், பால் போன்றவை நைவேத்தியமாகப் படைக்கப்படுகின்றது.

### பூச் சொரிதல் விழா

மாசி மாதத்தின் கடைசி ஞாயிறு அன்று பூச்சொரிதல் விழா நடைபெறும். அன்று முதல் அம்மன் பச்சைப் பட்டினி விரதம் மேற்கொள்வாள். அன்று பக்தர்கள் மேளதாளத்துடன் கூடை கூடையாகப் பூக்களைக் கொண்டு வந்து அம்மனுக்குப் படைக்கின்றனர் கருவறையில் அம்மனின் கழுத்து வரை பூக்கள் குவிந்து விடும்.

### கோயில் திறப்பு

இக்கோயில் அதிகாலையில் திறக்கப்பட்டால் இரவு ஒன்பதரை மணிக்குத்தான் அடைக்கப்படுகின்றது. தினமும்



**மாசி மாதத்தில் நடைபெறும் பூச்சொரிதல் விழாவில் பூ அலங்காரம்**

நான்கு வேளை பூஜை நடைபெறுகின்றது. தொடர்ந்து பக்தர்களின் வருகை இருந்து கொண்டே இருப்பதால் கோயிலை இடையில் பூட்டி வைப்பது கிடையாது.

## பௌத்த சமயம்

சமயபுரம் மாரியம்மன் கோயில் ஆரம்பத்தில் பௌத்தக் கோயிலாக இருந்தது என்பதற்கு அங்கு முடி காணிக்கை வழங்குதல், தன்னை வருத்தும் நேர்த்திக்கடன்கள் செய்தல், சமயம் மற்றும் கண்ணனூர் என்ற பெயர்கள், மற்றும் நதிக்கரையில் பௌர்ணமி அன்று மக்கள் ஒன்றாகக் கூடி கட்டுச்சோறு உண்டு மகிழ்தல் ஆகியவை ஆதாரங்களாக உள்ளன. சமயம் என்பது பௌத்த சமயக் கலைச் சொல்லாகும். இச்சொல் பௌத்தத் துறவிகள் தங்களுடைய மத நெறிகளைப் பின்பற்ற வேண்டும் என்பதைக் குறிக்கிறது.

பௌத்த சமயம் செல்வாக்குப் பெற்றுள்ள ஜப்பானில் **சொன்மையா** என்றும் சீனாவில் **சான் மேயே** என்றும் இச்சொல் இன்றைக்கும் பொருள் மாறாமல் வழங்குகின்றது. இங்கு பௌத்த சமயம் காலாவதியான பின்பு இச்சொல் வேறு பல மதங்களிலும் வேறு பல பொருள்களில் வழங்கியது.

## பல ஊர்களில் புத்தர் கோயில்கள்

*திருச்சி, தஞ்சாவூர், நாகப்பட்டினம் பகுதிகளில் பௌத்த சமயம் மிகுந்த செல்வாக்குப் பெற்று விளங்கியது. இந்திரனுக்குக் கோயில் இருந்த ஊர்கள் கண்ணனூர், கண்ணபுரம், கண்ணமங்கை என்று தற்போது வழங்கப்படுகின்றன. சங்கமங்கலம், புத்தமங்கலம், போதிமங்கலம், கும்பகோணம், திருவலஞ்சுழி, பட்டீஸ்வரம், பொன் பற்றி, புத்தக்குடி, உறையூர் கோட்டப்பாடி, மயூரப்பட்டணம், நாகப்பட்டினம் போன்ற ஊர்களில் புத்தருக்குக் கோயில்கள் இருந்ததை மயிலை சீனி வேங்கடசாமி அவர்கள் தன் நூலில் குறிப்பிட்டுள்ளார்.*

## தாரா சிலைகள் வைத்தல்

*கண்ணனூர், சங்கமங்கை, புன்னைநல்லூர், பட்டீஸ்வரம் போன்ற ஊர்களில் இருக்கும் பெண் தெய்வங்கள் ஆரம்பத்தில் பௌத்தப் பெண் தெய்வம் ஆகும். பௌத்த சமயத்தில் தாரா பெண் புத்தராகப் பல ஊர்களிலும் தெய்வமாக வைத்து வழிபடப்பட்டாள். தாராவில் பல வகைகள் உண்டு. கண்ணனூரில் எழுந்தருளி இருப்பவள் மஞ்சள் தாரா. இவள் அமைதியான தோற்றம் உடையவள். அரசி போல இலலிதாசனத்தில் ஒரு காலை மடித்து ஒரு காலைத் தொங்கவிட்டு அமர்ந்திருக்கிறாள். பச்சை தாரா என்பவள் பச்சைக்காளி ரூபமாக உக்ர ரூபத்தில் வழிபடப்பட்டாள். வெள்ளை தாரா சரஸ்வதி என்று பெயர் பெற்றாள். திருநாகேஸ்வரத்தில் முப்பெருந்தேவியராக மூன்று தாரா தேவிகளும் உள்ளனர்.*

## தலைமுடி காணிக்கை

*பௌத்தக் கோயில்கள் இருந்த இடங்களில் மட்டுமே இன்றைக்கும் தலைமுடி காணிக்கையாகக் கொடுக்கும் பழக்கம் இருந்து வருகின்றது. புத்த துறவிகள் தங்கள் தலையைத் தாங்களே மொட்டை அடித்துகொள்வது அவர்களின் சமய நெறியாகும். புத்த மடாலயங்களுக்குச் சிகிச்சைக்காக இந்திரன், தாரா போன்ற தெய்வங்களை வணங்கவும் வந்த பொது மக்களும் துறவிகளைப் போல முடி காணிக்கை செலுத்தி தம் உடலை வருத்தும் நேர்த்திக் கடன்களை மேற்கொண்டனர். இந்து வைதீகக் கோயில்களில் தலைமுடி காணிக்கை கொடுக்கும் பழக்கம் கிடையாது.*



பச்சை தாரா

## கடுமையான சமயப் பயிற்சிகள்

பட்டினி கிடப்பது, அலகு குத்திக் கொள்வது, தீச்சட்டி எடுப்பது, பூக்குழி இறங்குவது போன்ற கடும் பயிற்சிகள் பௌத்தத் துறவிகளிடம் காணப்பட்டன. இவர்கள் ஆண்டுக்கு ஒரு முறை இவற்றைச் செய்வது அவர்களின் சமய நெறிமுறைகளில் ஒன்றாக இருந்தது. பின்னர் புத்தர் மீது பக்தி கொண்ட பொதுமக்களும் இத்தகையச்சடங்குகளை நேர்ச்சையாக செய்யத் தொடங்கினர். புத்தர் வழிபாடு மறைந்த பிறகும் கூட வழிபாட்டுச் சடங்குகளைப் பின்பற்றி வந்த மக்கள் அவற்றை விட்டு விடாமல் பிடிவாதமாகத் தொடர்ந்து செய்கின்றனர். தெய்வங்களின் பெயர் மாறினாலும் தங்கள் வழிபாட்டுச் சடங்குகளைப் பொது மக்கள் மாற்றிக் கொள்ளவில்லை.



**பக்தர்கள் தீச்சட்டி எடுத்து நேர்த்திக்கடன் செலுத்துதல்**

## நோய் தீர்க்கும் காவல் தெய்வங்கள்

*பௌத்தர்களை முதன் முதலில் பெரிய பெரிய சிலைகளைத் தங்கள் கோயில்களில் வைத்தனர் புத்தருக்கு மிகப்பெரிய சிலைகள் வைக்கப்பட்டன. தாராவுக்கும் அவலோகதீஸ்வரருக்கும் பெரிய சிலைகள் வைக்கப்பட்டன. செப்புத் திருமேனிகளும் உருவாக்கப்பட்டன. பெரிய தங்க புத்தர் சிலையை நீலன் உடைத்து ஸ்ரீரங்க கோயிலின் திருமதில் கட்டியதாக குரு பரம்பரை எடுத்துரைக்கின்றது. நாகப்பட்டினத்தில் 300க்கும் அதிகமான புத்தர் சிலைகள் அகழ்ந்தெடுக்கப்பட்டன. எனவே புத்தர் கோயிலில் தெய்வச்சிலைகள் நான்கு கைகள் ஆறு கைகள் மூன்று முகம் என்று பல உருவங்களில் இருந்தன. தாரா சிலைகள் ஒரே முகத்துடன் கைகளுடன் விளங்கின. சில தண்டனை கொடுக்கும் காவல் தெய்வங்களாக நான்கு / இரண்டு ஆயுதங்களை ஏந்தி இருந்தன. வசுதாராப் பல சிலைகள் தாமரை மலர்களைப் பிடித்த படி காட்சியளித்தன. பௌத்த மடங்களில் மருத்துவ சேவை நடந்ததனால் இங்குள்ள பௌத்த ஆண், பெண் தெய்வங்கள் நோய் தீர்க்க வல்ல தெய்வங்களாகப் போற்றப்பட்டன. அவ்வாறே கண்ணனூர் என்ற சமயபுரத்தில் எழுந்தருளியிருக்கும் மாரியம்மன் மக்களை நோயில் இருந்து காக்கும் கடவுளாக காவல் தெய்வமாக இருந்து வருகிறார்.*



முனைவர் செ. இராஜேஸ்வரி

# 3. சிறுவாச்சூர் மதுரகாளியம்மன்

மதுரகாளியம்மன் கோயில் பெரம்பலூரில் இருந்து ஐந்து கிலோ மீட்டர் தொலைவில் உள்ள சிறுவாச்சூர் என்ற கிராமத்தில் உள்ளது. இங்கு மதுர காளியம்மன் வடக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். இதற்கு வடக்காக சோனை முத்தையா கோயில் உள்ளது. சோனை முத்தையா மதுர காளியம்மனுக்கும் இங்கு ஏற்கனவே கோயில் கொண்டிருந்த செல்லியம்மனுக்கும் காவல் தெய்வமாக விளங்குகிறார். அகோர வீரபத்திரர் சிலையும் இங்குக் காணப்படுகின்றது. அகோர வீரபத்திரரும் சிவனின் அம்சமாகக் காவல் தெய்வமாக இருக்கின்றார். சோனை முத்தையாவும் செல்லியம்மனும் நாட்டுப்புறத் தெய்வங்களாகும்.



**சிறுவாச்சூரில் உள்ள மதுர காளியம்மன் கோயில்**

மதுர காளியைக் கண்ணகி என்கின்றனர். அகோர வீரபத்திரர் சேர்க்கை காலத்தால் பிந்தியது. மதுரையில் இருந்து புறப்பட்டு வந்த கண்ணகி சிறுவாச்சூரில் மதுர காளியாக அமர்ந்து விட்டாள்.

## கண்ணகி செல்வி சேர்க்கை

சிறுவாச்சூரில் ஆதியில் இருந்த தனிப்பெண் தெய்வம் செல்லியம்மன் ஆவாள். வடக்கு வாய் செல்வி என்ற பெயரில் வடக்கு நோக்கிய கன்னித் தெய்வ வழிபாடு பல ஊர்களில் இருந்து வந்தது. கண்ணகி வந்த பின்பு செல்வியையும் கண்ணகியையும் இவ்வூர்களில் இணைத்து ஒரே தெய்வமாக்கினர். இதை ஆங்கில சமயவியல் அறிஞர்கள் *synchronisation* என்பர். ஐரோப்பிய நாடுகளில் ஆங்காங்கே மலைக் குகைகளில் வைத்து வணங்கிய ஆக்னேஸ், மடோனா, பியாட்ரிஸ் போன்ற தெய்வங்களை ஒன்றிணைத்து கன்னி மேரி என்று ஒரே தெய்வமாக்கினர்.



**சுடுமண்ணால் செய்யப்பட்ட செல்லியம்மன்**

மதுரையில் இருக்கும் கண்ணகியின் கோயிலுக்கு தற்போதைய பெயர் செல்லத்தம்மன் கோயில். வடக்கு வாய்ச் செல்வி என்று வணங்கப்பட்டு வந்த பெண் தெய்வத்தோடு கண்ணகி வழிபாடும் இங்கு இணைந்துள்ளது. செல்வி அம்மன், செல்லியம்மன், செல்லாயி அம்மன், செல்லத்தம்மன் என்று பல பெயர்களில் தமிழகமெங்கும் கன்னித் தெய்வ வழிபாடு செல்வி, இருந்தது செல்வி என்ற பெயர்களில் அவற்றில் சில கண்ணகி வழிபாட்டுடன் இணைந்தன.

## கண்ணகி வழிபாடு

மதுரையில் மேற்கு நோக்கிக் கோபமாகப் புறப்பட்ட கண்ணகி இங்கு வந்ததும் தெய்வம் ஆனாள். இக்கதையைப் போலவே கேரளாவில் கொடுங்கலூர் பகவதி அம்மன் கோயிலைக் கண்ணகி வந்து தங்கிய கோயில் என்பர். ஏற்கனவே இருந்த பெண் தெய்வ வழிபாட்டு கோயில்களில் காலத்திற்கு ஏற்ப கதைகளை மாற்றிப் பழைய பெயரில் புதிய தெய்வங்களை இணைத்து நவீனப்படுத்தும் முறைகளைப் பல திருத்தலங்களில் காணலாம்.

## மதுரகாளி தெய்வமான கதை

சிறுவாச்சூர் கோயிலில் இன்னொரு கதையும் வழங்குகின்றது. இங்கு செல்லியம்மன் என்ற தெய்வம் இருந்து வந்தாள் அவளை ஒரு மந்திரவாதி தன்னுடைய கட்டுப்பாட்டில் வைத்திருந்தான். மதுரையில் இருந்து வந்த காளியம்மன் செல்லியம்மனிடம் இன்று ஒரு நாள் இங்கு தங்கிப் போகிறேன் என்று இடம் கேட்டாள் ஆனால் செல்லியம்மன் மந்திரவாதிக்குப் பயந்து கொண்டு தன்னை மந்திரவாதியிடமிருந்து காப்பாற்றினால் மதுர காளிக்குத் தங்க இடம் தருவதாகக் கூறினாள். மதுர காளி மந்திரவாதியை அழித்து விட்டாள்.



**பின்புறம் காணப்படும் மலை முதலில் சூட தீபாராதனை காட்டப்படும் பெரியசாமி மலை**

*செல்லியம்மன் காளியைப் பார்த்து 'இனி நீயே இங்குக் கோயில் கொண்டிரு. இங்கு வரும் பக்தர்களுக்கு அருள் வழங்கு' என்று சொல்லிவிட்டு அருகில் இருக்கும் பெரியசாமி மலைக்குச் சென்று விட்டாள். போகும் முன்பு 'எப்பொழுதும் இந்தக் கோயில் வழிபாட்டில் எனக்கு தான் முதல் மரியாதை தரவேண்டும்' என்றாள். இவ்வாறு செல்லியம்மன் கூறியதால் சூட தீபாராதனைகள் காட்டும் போது பெரியசாமி மலையை நோக்கி முதலில் அங்கு இருக்கும் செல்லியம்மனுக்கு காட்டிய பிறகுதான் சன்னதிக்கு உள்ளே இருக்கும் மதுர காளிக்குக் காட்டுகின்றார்கள். இக்கதைகள் ஏற்கனவே இருந்தவள் செல்லியம்மன் அங்குப் புதிதாய் வந்து சேர்ந்தவள் மதுர காளி என்னும் கண்ணகி என்ற தகவலை உறுதி செய்கின்றன. தெய்வம் மாற்றத்தையும் உணர்த்துகின்றன. இதைத்தான் ஒண்ட வந்த பிடாரி ஊர் பிடாரியை விரட்டிய கதை என்போம்.*

*வெளியில் இருந்து வரும் தெய்வங்கள் ஊருக்குள்ளேயே இருக்கும் தெய்வங்களின் சக்தியைக் குறைத்துவிட்டு தானே சர்வ சக்தி படைத்த தெய்வமாகத் தங்கி விடுகின்றன.*

**மங்கலதேவிக் கோயில்**

*கண்ணகிக்கு இலங்கை, தமிழ்நாடு, கேரளா என பல இடங்களிலும் கோயில்கள் உண்டு. கேரளாவின் இடுக்கி மாவட்டத்தில் குமுளியில் இருந்து 14 கிலோமீட்டர் தொலைவில் மங்கலதேவிக் கோயில் என்ற பெயரில் தனிக் கோயில் உள்ளது. இது தமிழ்நாட்டுக்கும் கேரளாவுக்கும் இடையே எல்லைப் பகுதியில் உள்ளது. தேனி மாவட்டத்தில் கூடலூர் வனப்பகுதியில் பளியர்கள் அதிகம் வாழும் பளியங்குடி என்னும் இடத்திலிருந்து ஆறு கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. இக்கோயிலில் சித்ரா பௌர்ணமி தினத்தன்று மட்டும் திறக்கப்படும். அன்று மட்டும் இக்கோயிலுக்கு வர பக்தர்கள் அனுமதிக்கப்படுவர். இக்கோயிலைச் சேரன் செங்குட்டுவன் கட்டியதாகச் சொல்வர்.*

*மதுரையை எரித்தபின் மேற்கே புறப்பட்டுச் சேர நாட்டுக்கு வந்த கண்ணகி இங்கிருந்த வேங்கை மரத்தடியில் நின்றாள். கோவலன் புஷ்ப விமானத்தில் வந்து அழைத்து சென்றான்.*



பகவதி அம்மன்



கொடுங்கலூர் பகவதி கோயில்

## சிவப்புத் தெய்வங்கள்

*கேரளாவில் கொடுங்கலூர் மாவட்டத்தில் உள்ள பிரபலமான கொடுங்கலூர் பகவதி கோயிலில் வணங்கப்படும் பகவதியம்மை கண்ணகியே என்று கேரள மக்கள் தெரிவிக்கின்றனர். கொடுங்கலூர் அரச குடும்பத்தார் கொடுங்கலூர் பகவதியை தமது குலதெய்வமாகக் கருதுகின்றனர் ஆதிசங்கரர் இங்கு 6 ஸ்ரீ சக்கரங்களை நிறுவினார். இங்குக் காளி ரூபத்தில் எட்டுத் கைகளுடன் பகவதி அம்மை கோயில் கொண்டுள்ளாள். தொடக்கத்தில் உயிர்ப் பலி தரப்பட்டது. பின்பு அரசு உத்தரவால் நிறுத்தப்பட்டது. இத் தெய்வத்திற்குச் சிவப்பு சாயம் நனைத்த சிவப்புத் துணிகளை மட்டும் உடுத்துகின்றனர். சிறுவாச்சூர் மதுர காளிக்கு தலை முதல் பாதம் வரை குங்குமம் சாத்தப்படுகிறது. ஆக இவ்விரு தெய்வங்களும் சிவப்பு நிறமாக காட்சியளிக்கின்றன.*

## திங்கள், வெள்ளி மட்டும்

*சிறுவாச்சூர் மதுர காளியம்மன் கோயில் வாரத்திற்கு இரண்டு நாட்கள் மட்டுமே திறந்து வைக்கப்படும். மதுர காளி சிறுவாச்சூர் வந்து சேர்ந்த வெள்ளிக்கிழமையும் அவள் அங்கே தங்குவதற்குக் கோயில் கிடைத்த திங்கட்கிழையும் மட்டுமே இவ் ஆலயம் திறந்திருக்கும். இவ்விரு நாட்களும் தேவிக்கு சிறப்புப் பூஜைகள்*

*நடைபெறும். மற்ற நாட்களில் மதுரகாளியம்மன் செல்லி அம்மனுடன் போய் பெரியசாமி மலையில் தங்கி விடுவாள். மதுரை காளி என்ற பெயரே மதுர காளி என்று இனிமையான ஒரு பெயராக மாற்றம் பெற்றது என்று இப்பகுதியினர் தெரிவிக்கின்றனர்.*

## பூச்சொரிதல் விழா

*மதுரகாளியம்மன் கோயிலில் சித்திரை மாத வளர்பிறை முதல் செவ்வாய் அன்று பூச்சொரிதல் விழா தொடங்கும். அடுத்த செவ்வாய் அன்று காப்புக் கட்டு நடைபெறும். மொத்தம் 13 நாட்கள் திருவிழா நடத்துவார்கள். எட்டாம் நாள் செவ்வாய்க்கிழமை காப்புக் கட்டியதும் சுற்றுப்புறக் கிராமங்களில் இருந்து மக்கள் பெரியசாமி கோயில் மலை அடிவாரத்தில் கூடுவார்கள். அங்கு இரவு சிறப்புப் பூஜைகள் நடைபெற்று உயிர்ப் பலிகள் கொடுக்கப்படும். அது தான் ஆதி கோயில் என்பதால் அங்கேயே மக்கள் செல்கின்றனர்.*

*மலைக்கோயில் பெரியசாமிக்கும் செல்லியம்மனுக்கும் பூஜை முடிந்த மறு நாள் புதன்கிழமை அன்று மதுர காளியம்மன் கோயில் முன் பொங்கல் வைத்துக் கொண்டாடுவர். வியாழக்கிழமை அன்று மலைப் பெரியசாமிக்கும் செல்லியம்மனுக்கும் மதுர காளிக்கும் தேர்ப்பவனி நடைபெறும். வெள்ளிக்கிழமை அன்று மதுர*




**பூச்சொரிதல் விழாவில் பூக்களால் அலங்கரிக்கப்பட்ட கோயில்**
**(உள்படம்: அம்மன் பூ அலங்காரத்துடன் பவனி வருதல்)**



**தேர்ப்பவனி**

காளியம்மனுக்கு ஊஞ்சல் உற்சவம் நடக்கும். சனிக்கிழமை மஞ்சள் நீராட்டுடன் பூச்சொரிதல் விழா நிறைவு பெறும்.

இது தவிர ஆடி பதினெட்டாம் பெருக்கு புரட்டாசியில் வரும் நவராத்திரி போன்ற மற்ற விழாக்களும் மற்ற சிவன் கோயிலில் நடைபெறுவது போல இங்கும் நடைபெறுகின்றன.

## அமாவாசை & பௌர்ணமி

மதுர காளியம்மன் திருக் கோயில் வாரத்தில் இரண்டு நாட்கள் திறந்து வைத்திருப்பதை போலவே மாதத்தில் இன்னும் இரண்டு நாட்கள் திறந்து வைக்கப்படுகின்றன. அவை அமாவாசையும் பௌர்ணமியும் ஆகும் இவ்விரு நாட்களிலும் பக்தர்கள் மதுரகாளியைத் தரிசனம் செய்யலாம்.

## நேர்த்திக் கடன்கள்

மதுர காளியம்மன் கோயிலில் பெருமளவில் பக்தர்கள் மாவிளக்கு ஏற்றி அம்மனை வேண்டிக் கொள்கின்றனர். மாவிளக்குக்குப் பொதுவாக வீட்டில் இருந்தே மா இடித்துக் கொண்டு வருவர். சிலர் இங்கு வந்து அரிசியை ஊறப் போட்டு மாவை இடித்து விளக்கு ஏற்றுகின்றனர். இவர்களுக்காக இங்கு கல் உரல்கள் வைக்கப்பட்டுள்ளன.

## திருமணம் நடக்க, பிள்ளை பிறக்க

*மதுர காளியம்மன் கோயிலில் திருமணத்தடை குழந்தைப் பேறின்மை ஆகியவற்றுக்காகக் காளியை வணங்கினால் புத்திர தோஷம் களத்திர தோஷம் ஆகியன தீரும். பொருள் காணாமல் போய்விட்டால் மதுர காளியிடம் வந்து வேண்டிக் கொள்கின்றனர். திடீர் நஷ்டம் ஏற்படும் போது எதிர்பாராத இன்னல்கள் ஏற்படும் போது பலரும் மதுர காளியம்மன் நேரில் தரிசித்து தங்கள் துன்பம் தீர முறையிடுகின்றனர்.*



**மாவிளக்கு ஏற்ற அம்மனை வழிபட கோயிலில் வைத்துள்ள கல் உரலில் பக்தர் ஒருவர் மாவு இடித்தல்**

## பில்லி சூனியம் விலக

*மதுர காளியம்மன் கோயிலில் பில்லி, சூனியம், ஏவல் போன்ற தீய சக்திகளில் தங்களைக் காத்துக் கொள்ளவும் பக்தர்கள் ஏராளமாக வந்து வேண்டிக் கொள்கின்றனர். மதுர காளி மந்திரவாதியைத் தோற்கடித்தவள் என்பதால் மந்திர தந்திரங்களை அவள் அழித்து ஒழிப்பாள் என்ற நம்பிக்கை நிலவுகிறது. காத்து, கருப்பு, கண் திருஷ்டி போன்றவற்றால் துன்புறுவோரும் இங்கு வந்து காளியை வணங்கி தீர்வு காண்கின்றனர்.*



# 4. வக்ரகாளியம்மன்

**தொ**ண்டை மண்டலத்தின் 30 ஆவது திருத்தலமான வக்ரகாளியம்மன் கோயில் விழுப்புரம் மாவட்டத்தில் திண்டி வனத்தில் இருந்து மயிலம் செல்லும் வழியில் ஏழு கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. பாண்டிச்சேரியில் இருந்து 20 கிலோமீட்டர் தொலைவில் திருவக்ர என்ற ஊரில் வராக நதி அல்லது சங்கராபரணி நதிக்கரையில் இக்கோயில் அமைந்துள்ளது. இக்கோயிலை வலப்பக்கமாக ஐந்து முறையும் இடப்பக்கமாக ஐந்து முறையும் (வக்கிரமாக) சுற்றி வர வேண்டும்.

## தெய்வங்களின் வரலாறு

தமிழகத்தின் சமய வரலாற்றை மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். ஒன்று, இயற்கை வழிபாடும்



வக்ரகாளியம்மன் கோயில்

முன்னோர் வழிபாடும் இருந்த சங்ககாலம். இரண்டு, சமண பௌத்தர்கள் துறவிகள் (தெய்வங்கள்) வழிபாடு (காப்பிய காலம்) மூன்று, சைவம் / வைணவ தெய்வ வழிபாடு. (பக்தி இலக்கிய காலம்) இம் மூன்று காலகட்ட வரலாற்றையும் ஒரு சேர வக்ரகாளியம்மன் கோயிலில் காணலாம். இயற்கை வழிபாடான ஒளி வழிபாட்டின் தொடர்ச்சியாக இங்கு ஜோதி தரிசனம் நடைபெறுகின்றது.



**கோயிலின் வெளியே அமைந்துள்ள காவல் தெய்வம் சிலை**

### ஜோதி தரிசனம்

வக்ரகாளியம்மன் கோயிலில் அமாவாசை பௌர்ணமி நாட்களில் ஒளிவழிபாடு உண்டு. பௌர்ணமி அன்று இரவு 12 மணிக்கு அமாவாசை அன்று பகல் 12 மணிக்கு சிறப்புப் பூஜைகள் நடைபெறும். கோயில் கோபுரத்தில் ஜோதி ஏற்றப்படும். ஜோதி தரிசனம் காண அதிக எண்ணிக்கையில் பக்தர்கள் கூடுவார்கள். ஆடி மாத பௌர்ணமி அன்று கோபுரத்தில் மகா தீபம் ஏற்றப்படும்.

### பிடாரியம்மனும் வக்ரகாளியும்

தமிழ் மொழி என்ற அடையாளம் தோன்றுவதற்கு முன்னர் நாகர் என்ற அடையாளத்தோடு வாழ்ந்த மக்கள் பிடாரியைத் (பிடாரன், பிடாரி) தம் தாயாகக் கருதி வழிபட்டனர். பிடாரி தீயவர்களின் பிள்ளை தின்னி. ஊருக்கு வெளியே மயானத்தில் குடி கொண்டிருப்பாள். ஊருக்கு ஒரு பிடாரியும் ஏரிக்கு ஒரு ஐயனாரும் காவலுக்கு இருந்தனர். வக்ரகாளி அம்மன் என்பது பிடாரியம்மனின் புதுப் பெயர். வக்ரகாளியம்மன் கதையிலும் பிள்ளையைக் கொன்று பிரேதமாகத் தன் காதில் குண்டலமாக தொங்கவிட்ட நிகழ்ச்சி கூறப்பட்டுள்ளது.

## சந்திர தரிசனம்

*காப்பிய காலத்தில் தமிழ்த்தில் சமண பௌத்த சமயங்கள் பரவின. அப்போது இங்கு சமண ஆதி தேவர், ரிஷப தேவர் போன்ற தீர்த்தங்கரர்களும் போதிசத்துவ முனிவர்களும் தாரா தேவி, சிந்தா தேவி, மணிமேகலா தெய்வம் போன்ற பௌத்தர்களும் வழிபடப்பட்டனர். பௌத்தர்கள் சந்திர தரிசனத்துக்கு முக்கியத்துவம் அளித்தனர். பௌத்தம் பரவியுள்ள ஜப்பான் நாட்டில் moon viewing என்ற பெயரை அவரவர் இருப்பிடத்தில் இருந்தே சந்திர தரிசனம் செய்கின்றனர்.*

## பௌர்ணமி பூஜை

*சந்திர தரிசனத்தில் பௌர்ணமி பூஜை மிகவும் முக்கியமானது. அன்றிரவில் கிரி வலம் வருவதை பௌத்தர்கள் ஊக்குவித்தனர். இதை ஜப்பானில் பௌத்தர்கள் kai hog yo என்று குறிப்பர். பௌத்தர்கள் இக்கோயிலை சுவைகரித்துக் கொண்ட போது இங்குப் புதிதாக பிரம்ம தீர்த்தம் உருவானது. போதிசத்துவர், தாரா போன்றவர்களுக்கும் கோயில்கள் கட்டப்பட்டன. ஒளி வழிபாடு சந்திர சூரிய வழிபாடு என்று பெயர் மாற்றம் பெற்றது.*

*பௌத்தர்கள் பௌர்ணமி வழிபாட்டை தங்கள் மடாலயங்கள் இருந்த இடத்தில் சிறப்பாக நடத்தி வந்தனர். பௌர்ணமி இரவில் மக்கள் நிலவின் ஒளியில் மூழ்கி இருப்பது ஆரோக்கியமானது என்பதை நடை முறைக்குக் கொண்டு வந்தனர்.*

## சைவ வைணவக் கோயில்கள்

*மூன்றாவது கட்டமாக பக்தி இலக்கியக் காலத்திலும் அதற்குப் பிறகும் இத் திருத்தலத்தில் சிவன், விஷ்ணு கோயில்கள் உருவாகின. சிவபெருமானுக்கு மூன்று முகமும் சந்திரமவு லீஸ்வரர் என்ற பெயரும் தோன்றியது. அடுத்ததாக விஜயநகரப் பேரரசின் மன்னர்கள் அவர்களின் பிரதிநிதியான நாயக்க மன்னர்களும் வைணவர்களாக இருந்த காரணத்தினால் சிவன் கோயில்களில் பெருமாள் சன்னதியையும் ஏற்படுத்தினர். இங்கு வரதராஜ பெருமாள் சன்னதியும் இடம் பெற்றது.*

## நான்கு வழிபாடுகள் சிறக்கும் கோயில்

*வக்ரகாளியம்மன் கோயில் மனித குல வரலாற்றின் வரலாற்றுக்கு ஏற்ப மிக நீண்ட வரலாற்றையும் பாரம் பரியத்தையும் கொண்ட மிகப் பழைய கோயிலாகும். ஒளி வழிபாடு பிடாரியம்மன் வழிபாடு சிவன் வழிபாடு விஷ்ணு வழிபாடு என்று நான்கு வகையிலும் சிறப்புப் பெற்ற கோயிலாக இக்கோயில் விளங்குகின்றது. இங்கு கல் மரங்கள் கிடைத் திருப்பதும் இந்நிலப்பகுதியின் தொன்மையைப் பறை சாற்றுகிறது. மரங்கள் கல்லாக மாறுவதற்கு பல கோடி ஆண்டுகள் ஆகும்.*

## வக்ரகாளிக்கு முந்திய பிடாரி

*காளி என்றாலே கொடூரத் தோற்றம் கொண்டவள். அதுவும் வக்ரகாளி என்றால் மிக மிக கொடூரத் தோற்றம் கொண்டவள். வக்ரகாளியின் தலையில் ஜ்வாலா மகுடம் எனப்படும் தீப்பொறி பறக்கும் மகுடம் உண்டு. கழுத்தில் மண்டை யோடுகளால் ஆன மாலை அணிந்து இருப்பாள். வலது காது துளையின் வழியாக ஒரு குழந்தையின் பிரேதம் தொங்கும். எட்டுக் கைகளை உடையவள். இவளது*



**வக்ரகாளி அம்மன்**

*கைகளில் பாசம், சக்கரம், வாள், கபாலம், கட்டாரி போன்ற ஆயுதங்களை ஏந்தி இருப்பாள். தலைமுண்டங்களின் மாலையை அணிந்திருப்பாள். பத்ரகாளி சன்னதிக்கு எதிரே மயான பூமி உள்ளது. அம்மனே ஆதி காலத்தில் மயான பூமியின் தெய்வமாக பிடாரியம்மனாக வணங்கப்பட்டு வந்தாள். பிடாரியம்மன் தவறு செய்பவர்களின் குழந்தைகளைப் பறித்துத் தின்பாள். மயானத்தில் திறிவாள். குழந்தைகளின் பிரேதங்களைக் காதுகளில் குண்டலங்களாக அணிவாள். வக்ரகாளியின் காதிலும் பிரேத*

குண்டலம் தொங்குவதைப் பார்க்கலாம். அம்மனுக்கு முக்கியத் திருநாட்களில் சந்தனம், தயிர், இளநீர், தேன், பால் ஆகியவற்றால் அபிஷேகம் செய்யப்படும்.

## சிவனும் பெருமாளும்

வக்ரகாளியம்மன் கோயிலில் சிவன் சன்னதியும் பெருமாள் கோயிலும் உண்டு. இங்கே உள்ள சிவபெருமானின் பெயர் சந்திரசேகரன் அல்லது சந்திர மௌளீஸ்வரர். அம்பாளின் பெயர் வடிவாம்பிகை அல்லது அமிர்தேஸ்வரி. வக்ரகாளியம்மன் கோயிலில் வக்ர லிங்கம், சந்திர மௌளீச்வரர் மற்றும் சகஸ்ர லிங்கம் என்று மூன்று லிங்கங்கள் உண்டு.

## சந்திரகாந்த வக்ரலிங்கம்

வக்ரகாளிக்கு எதிரே இருக்கும் ஆத்மலிங்கம், வக்ரலிங்கம் என்றும் அழைக்கப்படுகின்றது. இந்த லிங்கம் சந்திரகாந்தக் கல்லால் செய்யப்பட்டது என்பதனால் வெயில் காலத்தில் இக்கருவறையும் இப்பகுதியும் குளிர்ச்சியாக இருக்கும். மழைக்காலத்தில் சிவலிங்கத்தின் மீது நீர் துளித்து இருப்பதைக் காணலாம்.




**வக்ர லிங்கம் சன்னதி**

## சஹஸ்ர லிங்கம்

பௌத்தர்கள் இந்திரனை லிங்க (கந்து) வடிவில் வணங்கினர். 'கந்துடைப் பொதியில்' என்று பட்டிணப்பாலை (வரி.249) குறிப்பிடும் இடம் இந்திரனுக்குரிய கந்து (சிறிய தூண்) வைத்து வழிபடும் இடம் ஆகும். இதனைத் தெய்வம் உறையும் தூண் என்பர். கந்து என்பது கல் முழை - கல் தூண் என்று தொடக்கத்திலும் பிற்காலத்தில் சிவ லிங்கத்தையும் குறித்தது. 'கந்துடைப் பொதி

என்பதற்கு உரையாசிரியர்கள் பெண் யானையைக் கட்டி வைத்து ஆண் யானையைப் புணர விடும் இடம் என்றனர். திருமுருகாற்றுப்படை முருகு குடி கொள்ளும் இடங்களில் ஒன்று பொதியில் என்கின்றது (வரி.167). மகாபலிபுரம் அருகில் சாலுவன் குப்பத்தில் உள்ள கந்து (கல் தூண்) சிலரால் முருகனின் வேல் என்றும் வேறு சிலரால் லிங்கம் என்றும் கருதப்படுகின்றது. ஆனால் அது இந்திரனின் வழிபாட்டுத்தலமாகவே இருந்திருக்க வேண்டும். இந்திரன் தேவலோகத்தில் உள்ள அப்சரஸ்களுக்கு (மங்கையருக்கு) இந்திரிய தானம் செய்தவன் என்பதால் கந்து வடிவில் பல குழிகள் (கரு வாய்) அமைக்கப்பட்டன. குழிகளுக்கு அருகில் இருந்த மேடுகளை பின்னர் கண்கள் என்று வருணித்துச் சொல்லி வேறொரு கதையும் உருவானது. பௌத்தம் அழிந்ததும் ஆயிரம் கண் உடைய கந்து அல்லது லிங்க் உருக்கள் (கண்ணாயிரம்) சஹஸ்ர (ஆயிரம்) லிங்கங்களாக மாற்றம் பெற்றன.

### சந்திரசேகரர்

வக்ரகாளி அம்மன் கோயிலில் உள்ள முக்கிய கருவறையில் உள்ள சிவலிங்கம் மூன்று முகங்களை உடையது. கிழக்கே தற்புருடம், தெற்கே அகோரம், வடக்கே வாமதேவம் என்பது மூன்று முகங்களுக்குரிய பெயராகும். மேற்கில் இருக்க வேண்டிய சத்தோயோஜாதம் என்ற முகம் காணப்படவில்லை.

### கதை 1

### வரதராஜப் பெருமாள் கதை

அனைத்து சிவன் கோயில் களுக்கும் தல புராணக் கதைகள் இருப்பது போல இந்தக் கோயிலுக்கும் ஒரு கதை உண்டு. குண்டலினி சித்தரின் பேரன் வக்ராசுரன் என்பவன் தேவர்களுக்கு மிகுந்த தொல்லை கொடுத்து வந்தான். தேவர்கள்




வரதராஜ பெருமாள்

*திருமாலை சேவித்து வக்ரா அசுரனின் தொல்லைகளிலிருந்து தம்மை விடு விக்கும்படி வேண்டினர். திருமால் தன் சக்ராயுதத்தை ஏவி வக்ராசுரனைக் கொன்றார். இதனால் இங்கு எழுந்தருளி யிருக்கும் வரதராஜ பெருமாள் பிரயோகச் சக்கரத்துடன் காட்சி தருகின்றார்.*

### கதை 2

### வக்ரகாளியம்மன் கதை

*வக்ராசரனுக்கு துன்முகி என்று ஒரு தங்கை இருந்தாள். அவளும் துர்க்குணங்கள் படைத்தவள். நல்லவர் களுக்குக் கெடுதல் பல செய்து வந்தாள். அவளை அழித்தால் மட்டுமே நல்லவர்கள் வாழ முடியும் என்ற நிலை ஏற்பட்டபோது பார்வதி தேவி அவளை அழிக்கக் கிளம்பினாள். அப்போது துன்முகி கர்ப்ப வதியாக இருந்த காரணத்தினால் கர்ப்பவதியை கொல்லக் கூடாது என்ற தர்மத்தின் படி அவள் வயிற்றைக் கிழித்து வயிற்றினில் இருந்த குழந்தையை வெளியே எடுத்து விட்டு அவளைக் கொன்றாள். இதனால் இங்கே எழுந்தருளியிருக்கும் வக்கிரகாளியின் காதில் சிசு பிரேத குண்டலமாகத் தொங்குவதைப் பார்க்கலாம்.*



**வக்கிரகாளியின் காதில் சிசு பிரேத குண்டலமாகத் தொங்குவதை காணலாம்**

### பிள்ளைக்கொலை

*பெரியாச்சியம்மன் கதையிலும் தாயின் வயிற்றைக் கிழித்துப் பிள்ளையை வெளியே எடுத்து பின்பு தாயைக் கொன்ற நிகழ்ச்சி காணப்படுகின்றது. பே(ய்)ச்சி, பெரியாச்சி, பிடாரி, நாகரம்மன், இடாகினி, பத்ரகாளி, பிள்ளைத்தின்னி ராக்கச்சி ஆகியோர் கதைகளில் பிள்ளைக் கொலை நிகழ்வு இடம்பெற்றுள்ளது.*



**கோயிலில் அமைந்துள்ள பிரம்ம தீர்த்தம்**

## தீர்த்தங்கள்

ஒளிவழிபாட்டு சிறப்புடைய இத்தலத்தில் உள்ள தீர்த்தங்கள் சந்திர தீர்த்தம், சூரிய தீர்த்தம் என்று அழைக்கப்படுகின்றன. பௌத்த சமயம் வந்த பின்பு இங்கு ஒரு பிரம்ம தீர்த்தமும் தோன்றியது.

## வக்ர சனி

வக்ரகாளியம்மன் கோயிலில் அருணகிரியார் பாடிய முருகனுக்குத் தனிச் சன்னதி உண்டு. சனிபகவான் வக்கிர நிலையில் (பின்னோக்கி) பயணிக்க தயாராக இருக்கும் வடிவில் சன்னதி கொண்டுள்ளார். அவர் தனது வாகனமான காகத்தை இடது பக்கமாக திருப்பி நிறுத்தி இருக்கின்றார். மற்ற கோயில்களில் காகம் வலது பக்கமாக நோக்கி நிற்கும். வலது பக்கமாக காகம் இருந்தால் அவர் நேரே பயணிக்கின்றார் என்று பொருள். காகம் இடது பக்கமாகத் திரும்பி நின்றால் அவர் வந்த வழியே திரும்பிச் செல்கின்றார் அதாவது பின்னோக்கி வக்கிரமாகச் செல்கின்றார் என்று பொருள். இங்கு சனி வக்ரசனியாக இருக்கின்றார். கிரஹங்கள் பின்னோக்கிச் செல்லாது. அவற்றின் வேகம் மட்டுப்படும்.

## வக்ர தோஷ நிவர்த்தி தலம்

ஒருவர் ஜாதகத்தில் கிரகங்கள் வக்கிரமாக இருந்தால் வக்ரகாளி அம்மன் கோயிலுக்கு வந்து சிவபெருமானையும் பெருமாளையும் ஒரு சேர வணங்கிச் செல்லலாம். வக்ர தோஷம் விலகும். சனி

வக்கிரமாக இருந்தால் இங்கே உள்ள சனிபகவானுக்கு சனிக் கிழமை அன்று வந்து சிறப்புப் பூசைகள் செய்யலாம். சனி தோஷம் நீங்கும்.

## தாலி பாக்கியம் பெற

ஒளித் தெய்வமாக தீபத்தின் அருள்ஜோதியாக லட்சுமிகரமான அம்மன் ஒருவர் தீபலட்சுமி அம்மன் என்ற பெயரில் இக்கோயிலில் தனிச் சன்னதி கொண்டுள்ளார். இவர் பழைய பௌத்த தாராவாக இருக்கக் கூடும். திருமணத் தடை, திருமண தோஷம், மாங்கல்ய தோஷம் இருப்பவர்களும் தீபலட்சுமி அம்மன் கோயிலுக்கு வந்து மஞ்சள் கயிறு கட்டி எலுமிச்சை விளக்கேற்றி மனம் உருகி நின்று வேண்டிக்கொண்டால் தடைகள் விலகி திருமணம் விரைவில் நடைபெறும். மாங்கல்யம் உறுதி பெறும்.

## குறை தீர்க்கும் கோயில்

வக்ரகாளியம்மன் கோயிலில் தங்கள் குறைகளைத் துண்டுச் சீட்டில் எழுதி போடும் முறையும் உள்ளது. இதனாலும் மக்கள் குறைகள் நீங்குகிறது.




குண்டலினி முனிவர் சன்னதி

## ஜீவன்முக்தி தலம்

குண்டலினி முனிவர் இங்கே தவமிருந்து ஜீவன் முக்தி அடைந்ததால் தெற்கு பிரகாரத்தில் அவருக்கு ஒரு சிலை உண்டு. அவருடைய பேரன் வக்ராசுரனுக்கும் ஒரு சிலை உள்ளது.



# 5. மேச்சேரி பத்திரகாளி

*தமிழக பக்தர்கள் மட்டுமல்லாது கர்நாடக மாநில பக்தர்களும் வந்து வரம் பெற்று திரும்பும் கோயில் சேலத்தின் அருகில் மேச்சேரியில் உள்ள புகழ்பெற்ற பத்திரகாளி அம்மன் கோயிலாகும். இக்கோயில் சேலத்தில் இருந்து 32 கிலோ மீட்டர் தொலைவிலும் மேட்டூரில் இருந்து 20 கிலோமீட்டர் தொலைவிலும் அமைந்துள்ளது. இங்கு வடக்கு வாய் செல்வியாக வடக்கு நோக்கி காளியம்மன் கருவறையில் காட்சி தருகின்றாள்.*

### ஓவியங்கள்

*மேச்சேரி பத்திரகாளியம்மன் கோயிலில் அம்பாளின் ஓவியம் 5 வர்ணத்தில் அழகுறக் காட்சியளிக்கின்றது. அதனைத் தொடர்ந்து*



**சுவரில் செதுக்கப்பட்டுள்ள அம்மன் சிலைகள் மற்றும் விநாயகர்**



**மேச்சேரி பத்திரகாளி அமர்ந்த கோலத்தில்**

*மகா மண்டபத்தில் வள்ளி தெய்வானையுடன் முருகன், நாக கன்னி, அஷ்டலட்சுமி, தில்லை நடராஜர், நர்த்தன விநாயகர், மீனாட்சியம்மன் ஆகியவை சுவர்களில் செதுக்கப்பட்டுள்ளன. அம்மன் இருக்கும் கருவறைக்கு எதிரே அர்த்த மண்டபமும் அடுத்து மகா மண்டபமும் உள்ளது.*

## அம்மனின் தோற்றம்

*மேச்சேரி பத்திரகாளி கருவறையில் சாந்த சொரூபியாக அக்கினி மகுடத்துடன் அருள்கின்றாள். காளிக்கு உரிய சிங்கப்பல்லோ தொங்கும் நாக்கோ இவளுக்கு இல்லை. இவள் வீராசன முறையில் அமர்ந்த கோலத்தில் அமைதியாகக் காட்சி தருகிறாள். காளி போல் நின்ற கோலத்தில் இல்லை. எனவே இக்கோயில் பழைய தாரா கோயிலாக இருக்கக்கூடும். கைகளில் பிரம்மா, விஷ்ணு, சூலாயுதம், கபாலம், உடுக்கை, வாள், கேடயம், தலை ஆகியவற்றை ஏந்தி இருக்கின்றாள். துஷ்ட நிக்கிரக சிஷ்ட*



**கோயிலின் அமைப்பு**

பரிபாலகி என்பதை விளக்கும் வகையில் தீமையை அழித்துத் தன்னை நாடி வந்தவர்களைத் துன்பங்களிலிருந்து பாதுகாக்கும் அம்மனாக அசுரனின் மார்பில் மிதித்தபடி அமர்ந்துள்ளாள்.

## கோயிலின் அமைப்பு

அம்மன் பல நூற்றாண்டுகளுக்கு முற்பட்டவள். ஆனால் கோயில் நாயக்கர் கால முறையில் கட்டப்பட்டுள்ளது. வடக்கு வாசலில் ராஜகோபுரம் அமைந்துள்ளது. கோயிலை சுற்றி மதில்களும் நான்கு திசைகளில் நான்கு கோபுரங்களும் உள்ளன.

## ஸ்தல புராணம் இல்லை

மேச்சேரி பத்ரகாளி கிராம தேவதையாக இருப்பதாலும் இங்கு சிவன் கோயில் உருவாக்கப்படாததாலும் ஸ்தல புராணக் கதை எதுவும் வழங்கவில்லை. வைதீகக் கலப்பற்ற நாட்டுப்புற வழிபாடுகளும் நேர்ச்சைகளும் தொடர்கின்றன.

## வழிபாட்டுப் பலன்கள்

### ஏவல் பில்லி சூனியம் அகல

மேச்சேரி பத்ரகாளியைத் தொடர்ந்து வணங்கி வந்தால் முற்பிறவியில் செய்த பாவங்கள் தொலையும். ஏவல் பில்லி சூனியம் போன்றவை விலகும். கண் திருஷ்டி அகலும். நாக தோஷத்தால் ஏற்படும் திருமணத் தடை, குழந்தைப் பேறின்மை நீங்கும். இதற்கு ராகு காலத்தில் எலுமிச்சை விளக்கு ஏற்றி வழிபடுவது சிறந்த பலன் அளிக்கும்.

### மனநலம் பெற

மனநலம் பாதிக்கப்பட்டவர்கள் மன வளர்ச்சி குன்றிய குழந்தைகளுக்கு இங்குத் தொடர்ந்து வந்து பூஜை செய்தால் அவர்களின் உடல் மன சிக்கல்களை தீர்த்து வைக்கும். அம்மன் வாசலில் இருக்கும் பூதகனங்கள் பேய் பிசாசு பிடித்தவர்களைத் தீய சக்திகளிடம் இருந்து மீட்டுக் காப்பாற்றுகின்றன. மன அழுத்தம் நீங்கவும் மனக் குழப்பம் அகலவும் இக்கோயிலுக்கு வெள்ளிக்கிழமை தோறும் வந்து வணங்கிச் செல்லலாம்.



**குழந்தை வரம் கேட்டு அம்மன் சன்னதியில் சிகப்பு துணியில் தொட்டில் கட்டி வேண்டுதல்**



**கோயிலில் உள்ள சப்தகன்னிகள் சிலை**

### கால் நடைகள் செழிக்க

*கிராம மக்கள் தங்கள் கால்நடைகளுக்கு நோய் ஏற்பட்டாலும் பத்திரகாளி அம்மனை வணங்கி விபூதி பெற்றுக் கால்நடைகளுக்கு உள்ளே கொடுத்தும் மேலே தடவியும் நோய் தீர்க்கப் பெறுகின்றனர். நேர்த்திக்கடன் செய்து கொண்டு துன்பங்கள் தீர்ந்ததும் இங்கு வந்து பொங்கல் வைத்து அம்மனை வழிபடுகின்றனர்.*

### நேர்த்திக்கடன்கள்

*மேச்சேரி பத்திரகாளி அம்மன் கோயிலில் பூங்கரகம் எடுத்தல், அலகு குத்துதல், பூக்குழி இறங்குதல், தீச்சட்டி எடுத்தல் போன்ற நேர்த்திக் கடன்களை ஆண்களும் பெண்களும் வந்து நிறைவேற்றுகின்றனர். மாசித் திருவிழாவின் போது பக்தர்கள் ஏராளமாக வந்து தங்கள் நேர்த்திக் கடன்களை நிறைவேற்றுகின்றனர்.*

### பூஜைகள்

*தமிழ் மாதங்களின் அமாவாசை குறிப்பாக ஐப்பசி அமாவாசை, தை அமாவாசை, ஆடி அமாவாசை நாட்களில் அன்று காளிக்குச் சிறப்புப் பூஜை நடப்பது உண்டு. இங்கு நவீன*

*காலத்துக்கு ஏற்ப ஆடிப்பூரம், மாசி மகம் போன்ற பௌர்ணமி நாட்களிலும் சிறப்புப் பூஜைகள் நடைபெறுகின்றன.*

**தாரா தேவி**

*இந்து சமயத்தில் தச மஹா வித்யாவில் இரண்டாவதாக விளங்கும் தாராதேவி பௌத்த சமயத்தில் போதிசத்துவர் ஆவாள். புத்தர் நிலை அடைந்த பெண் என்பதால் அவளை பெண் புத்தராகக் (female Buddha) கொண்டு பௌத்த மடாலயங்களில் வழிபடு கடவுளாக போற்றினர். தாரா வழிபாட்டில் அவள் தரும் பலனுக்கு ஏற்ப பச்சை தாரா, மஞ்சள் தாரா, நீலத் தாரா, வெள்ளைத் தாரா, ருத்ர தாரா எனப் பல வகை உண்டு.*

**ருத்ர தாரா**

*ருத்ர தாரா தீமையை (அசுர சக்திகளை) அழிப்பவள் என்று நம்பப்பட்டதால் அவளுடைய உருவம் பல கைகளில் பல ஆயுதங்களுடன் அமைக்கப்பட்டது. அவள் வீராசனத்தில் அமர்வாள். ஆனால் காளியைப் போல் நாக்கு தொங்குவதோ சிங்கப் பற்களோ இருப்பதில்லை. சமயபுரம் மாரியம்மன், புன்னைநல்லூர் மாரியம்மன், குலசேகரம் முத்தாரம்மன், மேச்சேரி பத்திரகாளி ஆகியோரின் தோற்றம் தாராவின் ஒத்து இருப்பதால் இக்கோயில்கள் பழைய தாரா வழிபாட்டுத் தலங்களாக இருக்க வாய்ப்பு மிகுதி. இவர்களின் காலுக்கு அடியில் தீமை ஒழிப்பைக் குறிக்க அசுரன் இருப்பான். இவர்களின் ஆசனம் வீராசனம் அல்லது லலிதாசனம். ஒரு காலை மடித்து மறு காலை கீழே தொங்க விட்டிருப்பர்.*

**தாராவும் காளியும்**

*காளிக்கு வெட்டுப்பட்ட தலைகளின் மாலையும் இடுப்பில் வெட்டுப்பட்ட கரங்களிலான ஆடையும் உண்டு. தாராவுக்கு அவை கிடையாது. அவள் புலித் தோலை உடுத்தியிருப்பாள். எனினும் பச்சை தாரா கோயில்கள் பச்சைக் காளி கோயில்களாக மாற்றம் பெற்றுள்ளன. பச்சை தாரா வேளாண்மைக்குரிய பசுமைத் தெய்வம் ஆவாள். இதனாலும் இவளை நாட்டுப் புறத்தினர் அதிகம் வணங்கி வந்தனர்.*

**பைத்யம் சைத்யம்**

*பௌத்த வழிபாட்டுத் தலங்கள் சைத்தியங்கள் எனப்பட்டன. பௌத்தர்கள் மருத்துவ சேவை செய்தனர். ஆடு, மாடு போன்ற கால்நடைகளுக்கும் பறவைகளுக்கும் மருந்து கொடுத்து நோய் தீர்த்தனர். இங்குப் பைத்தியங்களின் மன நோய், பேய் பிசாசுகள் தொல்லை ஆகியவை நீக்கப்பட்டன. சீன பௌத்தர்கள் ஜின் எனப்படும் ஆவிகளுடன் தொடர்பு வைத்திருந்தனர். இங்கு வாழ்ந்த பௌத்தர்கள் யட்சர்களையும் யட்சிகளையும் (இயக்கி / இசக்கி) தம் வசம் வைத்திருந்தனர். இவர்களால் அமானுஷ்ய சக்திகளுடன் தொடர்பு கொள்ள முடிந்தது. இதனால் சைத்யங்களில் மன நலம் பாதித்தவர்கள் (பைத்தியங்கள்) சிகிச்சை பெற்று குணம் அடைந்து வீடு திரும்பினர். இவை அனைத்தும் இன்று மேச்சேரி பத்ரகாளி கோயிலில் நடைபெறுகின்றது. எனவே இக்கோயில் பழைய தாரா தேவி கோயிலாக இருந்திருக்கக்கூடும்.*



**நோய் தீர்க்கும் மருந்துடன் ஆமை மீது அமர்ந்திருக்கும் குவான் ஜின்**

*மருந்து மாயம், மந்திர தந்திரம் என்ற சொற்றொடர்கள் பௌத்த சமயம் செல்வாக்குப் பெற்ற காலத்தில் தோன்றின. ஏவல், பில்லி, சூன்யம்திற்கு மாயம் உதவியது, அமானுஷ்ய தீய சக்திகளை மாயமந்திரத்தால் கட்டுப்படுத்தினர். தூய சக்திகளால் (guardian spirits) நற்பலன் பெற மந்திர தந்திரங்கள், தாந்திரீகம் உதவின. எனவே இன்றும் ஏவல் பில்லி சூனியத்தால் பாதித்தவர்கள் இக்கோயிலுக்கு வந்து அம்மனை வணங்கிப் பயன்பெறுகின்றனர்.*



**தேர்த்திருவிழா**

**கோயிலின் காலம்**

*மேச்சேரி பத்ரகாளி அம்மன் கோயில் 800 ஆண்டுகள் பழமையானது. பௌத்த சமயம் தமிழகத்தில் 7, 8ஆம் நூற்றாண்டில் பெற்றிருந்த செல்வாக்கு 11, 12ஆம் நூற்றாண்டுகளில் குறைந்தது. அக்காலத்தில் சீனாவிலும் ஜப்பானிலும் அதன் செல்வாக்கு கொடி கட்டிப் பறந்தது. இங்கு சைவம் கோலோச்சத் தொடங்கியது. புதிதாக உருவான கோயில் சிலைகளும் சோமாஸ்கந்தர் போன்ற செப்புத் திருமேனிகளும் மக்களுக்குப் பழக்கமான பழைய பௌத்த சாமிகளின் உருவங்களில் அமைக்கப்பட்டன என்பதை நியூயார்க் மற்றும் சென்னை மியூசியங்களில் இருக்கும் சிலைகளைக் கண்டு தெளிவு பெறலாம்.*

*மேச்சேரி பத்ரகாளி பல நூற்றாண்டுகளாக சகல சக்திகளும் பெற்ற அம்மனாகத் தன்னை நாடி வரும் பக்தர்களின் துன்பங்களை அகற்றி நன்மைகளை அருள்கின்றாள்.*



# 6. கோலவிழி அம்மன்

மயிலாப்பூரில் உள்ள கோலவிழி அம்மன் கோயில் கற்பகாம்பாள் கோயிலுக்கு முந்தியது. இங்குப் பூசை நடந்த பிறகு கற்பகாம்பாள் கோயிலில் பூஜை நடைபெறும். கற்பகாம்பாள் கபாலீஸ்வரர் கோயிலின் அறுபத்து மூவர் ஊர்வலத்தில் கோலவிழி அம்மன் பல்லக்கு முதலில் செல்லும். அதன் பிறகு விநாயகரின் பல்லக்கு செல்லும். பொதுவாக விநாயகர் பல்லக்கு முதலில் செல்வதே திருவீதி உலாவின் மரபாகும். ஆனால் இங்கே இம்மரபு புதிய மாற்றத்தைக் காண்கின்றது.

## பச்சைப்பட்டு கோலவிழியம்மன்

கோலவிழி அம்மன் வடக்கு வாய்ச் செல்வியாக எழுந்தருளி இருக்கின்றாள். இவளை பச்சப்பட்டு கோலவிழி அம்மன் என்றும் அழைப்பர். இவளுடைய ஆதி பெயர் பத்திரகாளி அம்மன் ஆகும்.

## உருவத் தோற்றம்

கோலவிழி அம்மன் கருவறையில் அமர்ந்த கோலத்தில் ஒரு காலை மடக்கிக் குத்துக்காலிட்டு ஒரு காலைத் தொங்கவிட்டு வீராசனத்தில் (வீரத் தோற்றத்தில்) காணப்படுகின்றாள். தலையை ஒரு பக்கம் சாய்த்து திருவக்கரையில் உள்ள பத்ரகாளி போலத் தோன்றுகின்றாள். தலையில் அக்கினி மகுடமும் அதில் இடது பக்கம் சந்திரனும் கங்கா நதியும் வலது பக்கம் நாக ரூபமும் இடம் பெற்றுள்ளது. இவள் சன்னதிக்கு முன்பு சிறிய உருவில் நின்ற கோலத்தில் விநாயகரும் முருகனும் தனித்தனி சன்னதியில் உள்ளனர்..



**எட்டு கைகளுடன் வீராசனத்தில் அமர்ந்திருக்கும் கோலவிழி அம்மன்**

*கோலவிழி அம்மன் ஜ்வாலா மகுடமும் எட்டுக் கைகளும் கொண்டவள். வலது கைகளில் சூலம், வாள், உடுக்கை, வேதாளம் ஆகியவற்றையும் இடது கைகளில் கேடயம், அங்குசம், மணி, கபாலம் ஆகியவற்றையும் ஏந்தி உள்ளாள்.*

## கோலவிழி அம்மன்

*மயிலாப்பூர் கபாலீஸ்வரர் கோயிலின் காவல் தெய்வமாக உள்ளாள். எல்லைக் காளி என்றும் இவளைப் போற்றுகின்றனர்.*

## திருமேனிகளின் தோற்றம்

*மூலஸ்தானத்தில் கோலவிழி அம்மனுக்கு முன்பு அவளது இரண்டு செப்புத் திருமேனிகள் உள்ளன. அவற்றிற்குத் தான்*

*அபிஷேகம் செய்யப்படுகின்றது. இதில் ஒரு திருமேனி நான்கு கரங்களுடன் ஜ்வாலா மகுடத்துடன் உள்ளது. மற்றொரு திருமேனி நின்ற கோலத்தில் தன் இடது கையைத் தொங்க விட்டு வலது காலைச் சுட்டி காட்டுகின்றது. திருவக்கரை வக்ரகாளியும் இதே தோற்றத்தில் தான் காணப்படுகின்றாள்.*

### நோய்நொடி விலக்கும் ஆமை

*இங்கு வராகி அம்மன் சன்னதி தனியாக உள்ளது அதன் முன்புறத்தில் தரையில் புடைப்புச் சிற்பமாக ஆமை காணப்படுகின்றது. இந்த ஆமைக்கு இளநீர் அபிஷேகம் செய்தால் நோய்நொடி விலகும்.*

### நாகதோஷம் விலக்கும் நாகர்

*இங்கு நாகலிங்க மரத்தடியில் நாகர்கள் வழிபடு தெய்வமாக இருக்கின்றனர். எனவே நாகதோஷம் உள்ளவர்கள் ராகு கேதுக்களால் திருமணத்தடை மற்றும் கர்ப்பப்பை கோளாறு கருவுறாமை போன்ற துன்பங்களால் அவதிப்படும் பெண்கள் இக்கோயிலுக்கு வந்து நேர்த்திக் கடன்களை செலுத்தி குறை தீர்ந்து நன்மை அடைகின்றனர்.*



**மயிலாப்பூரில் உள்ள கோலவிழி அம்மன் கோயிலில் ஆமையின் புடைப்புச் சிற்பம்**



**நாகர் வழிபாடு**

## சாமி கதை

*கற்பகாம்பளையும் கோலவிழி அம்மனையும் இணைத்து ஒரு கதை வழங்குகின்றது. மயிலாப்பூர் திருத்தலத்தில் பார்வதி தேவி மயில் வடிவில் தவம் செய்த போது அவளுக்கு இடையூறு செய்த அரக்கனைக் கொல்ல சிவபெருமான் பத்ரகாளி அம்மனை அனுப்பினார். அந்தப் பத்ரகாளியே இங்குக் கோலவிழி அம்மனாக அருள் பாலிக்கின்றாள்.*

## சூரிய வழிபாடு

*சூரிய பகவான் கோலவிழி அம்மனை தன் ஒளிக்கரங்களால் தை மாதத்தில் ஆறு நாட்கள் தொட்டு வணங்கிச் செல்கிறார். சூரிய ஒளி அம்மனின் சிலை மீது படுகின்றது.*

## நேர்த்திக்கடன்கள்

*கோலவிழி அம்மன் கோயிலில் பக்தர்கள் அங்கப் பிரதட்சணம் செய்வது குறிப்பிடத்தக்க நேர்த்திக்கடன் ஆகும். பக்தர்கள் 27 சுற்று வலமாகவும் இரண்டு சுற்று இடமாகவும் அம்மனைச் சுற்றி வருகின்றனர்.*

## கடன் தீர்க்கும் மாவுக் காப்பு

*அம்மனுக்குப் பச்சரிசி மாவினால் மாவுக்காப்பு சாற்றுவது கடன் நிவாரணத்திற்கு உண்டான நேர்த்திக்கடன் ஆகும்.*



**மாசி மாதம் நடைபெறும் பால்குட விழா**

*அம்மனுக்கு சந்தனக் காப்பும் குங்குமக் காப்பும் கூட நேர்த்திக் கடன்களாகச் செய்யப்படுகின்றன.*

### சிறப்பு விழாக்கள்

*சித்திரை மாதம் பௌர்ணமி அன்று பூச்சொரிதல் விழா நடைபெறும். ஆடிப்பூரத்திற்கு சுமார் 250க்கும் மேற்பட்டோர் அருகில் இருக்கும் முண்டகக் கன்னி அம்மன் கோயிலில் இருந்து இங்கு கோலவிழி அம்மன் கோயிலுக்கு தீச்சட்டி எடுத்து வருகின்றனர். புரட்டாசி மாதம் நவராத்திரி விழாவின் நிறைவில் அம்மன் சூரனை வதம் செய்த நிகழ்வு நடை பெறுகின்றது.*

*புரட்டாசி மற்றும் மாசி மாதம் மூன்றாம் ஞாயிறு அன்று பக்தர்கள் பால்குடம் எடுத்து வருகின்றனர்.*

### 6000 ஆண்டு வரலாறு

*கோலவிழி அம்மன் கோயிலுக்கு எதிரே முன்பு மயானம் இருந்தது. அவள் ருத்ர பூமியை ஆட்சி செய்யும் ருத்ர தேவதையாக இங்கு. விளங்குகின்றாள். இம் மயானத்தில் பிடாரி அம்மனாக முன்பு விளங்கினாள். மயானத்தில் எரியும் பிணத்தின் இறைச்சியை உண்டு சாம்பலைப் பூசி தாந்திரீக உறவு கொண்டு வாழும் நூற்றுக்கணக்கான அகோரிகள் இக்கோயிலில் சில*

நூற்றாண்டுகளுக்கு முன்பு தங்கி இருந்தனர். இவள் பிடாரி என்பதால் தலையில் நாக முடி அணிந்திருக்கின்றாள்.

## நாகர்களின் பிடாரி

உலகின் தென் பகுதியில் ஆப்பிரிக்கா, இந்தியா, ஆஸ்திரேலியா, இலங்கை போன்ற பகுதிகள் ஒரே நிலப்பரப்பாக இருந்த காலத்தில் இங்கு வாழ்ந்த மனிதர்கள் நாகர்கள் எனப்பட்டனர். அவர்கள் இறந்து போன தங்கள் முன்னோர்கள் நாக உருவில் கண்களுக்குத் தெரிவார்கள் என்று நம்பியதால் நாகத்தைத் தெய்வமாக வழிபட்டனர். ஒவ்வொரு வீட்டிலும் மனை நாகம் என்று ஒரு நாகப்பாம்பு இருந்து வந்தது. இந் நாகர்களின் வழிபடு தெய்வம் நாகத்தை தலையிலும் உடலிலும் அணிந்து கொண்டிருந்த பிடாரனும் பிடாரியும் ஆவர். இறந்தவர்கள் நாக ரூபத்தில் வருவதான நம்பிக்கை இருந்ததனால் பிடாரனையும் பிடாரியையும் மக்கள் மயான தெய்வங்களாகப் போற்றினர்.

## பௌத்தர்களின் நாகர் வணக்கம்

தமிழர்களின் பழஞ்சமய மரபில் முன்னோர் / நாகர் வழிபாடும் இயற்கை வழிபாடும் மட்டுமே இருந்து வந்தன. கிமு மூன்றாம் நூற்றாண்டில் சமண பௌத்த சமயங்கள் தெற்கே பரவிய போது இவ் வழிபாட்டுக்குப் பௌத்த சாயம் பூசப்பட்டது. நாகர் வழிபாடு பௌத்தர்களின் முக்கிய வழிபாடாக இங்கு மாறியது கௌதம புத்தர் தாமரை ஸ்லோகம் சொல்லும் போது அருகில் இருந்து அஷ்ட நாகர்கள் செவிமடுத்தனர் என்பது போன்ற கதைகளும் தோன்றின. நாகர்கள் கோயில் பொக்கிஷத்தின் கோயில் பொக்கிஷத் காவலராக உயர்ந்தனர். பௌத்த மடாலயங்களின் மருத்துவப் பிரிவில் விஷக்கடி முக்கியத்துவம் பெற்றது.

## பெண் மருத்துவ புத்தர் பர்னஷ்வரி

பௌத்த சமயத்தில் பர்னஷ்வரி என்ற பெண் புத்தர் தொற்று நோய்களைத் தீர்க்கும் தேவதையாக நீல நிறத்தில் /கருப்பு நிறத்தில் வணங்கப்பட்டார். மருத்துவ புத்தர் சிம்மாசனத்தில் எழுந்தருளி இருந்தார். பௌத்த சமயத்தில் மருத்துவ சேவை



**பர்னஷ்வரி தேவி - திபெத்**

*மடாலயங்களில் முக்கியப் பணியாக நடைபெற்றது. ஒவ்வொரு நோய்க்கும் தனித்தனியாக அவர்கள் கடவுளரை/ புத்தரை வைத்து வழிபட்டனர்.*

## விஷக்கடி சுகமாக்கும் தாரா

*தாராவைப் பெண் புத்தராகக் கருதி அவளை பல நிறங்களில் சிவப்பு, வெள்ளை, மஞ்சள் பச்சை என்று பல பயன்களுக்காக வழிபட்டனர். பச்சை தாராவை (ஜங்குலி தாரா) ஷியாம் தாரா என்ற பெயரில் பச்சை, நீலம், கருப்பு நிறம் கொண்டவளாக வணங்கினர். இவள் பாம்பு, தேள் போன்ற விஷக்கடியின் தீமைகளைப் போக்குவாள். இந்தத் தாராவுக்கும் ஆறு கரங்கள், எட்டு கரங்கள் உண்டு. ஜங்குலி தாரா இலைகளாலான (இங்கு வேம்பு) அரையாடை உடுத்தி இருந்தாள். வலது பக்கக் கரங்களில் வஜ்ராயுதம், மழு, அம்பு, ஆகியவற்றையும் இடது பக்கக் கரங்களில் வில், மலர், கிளை ஆகியவற்றையும் கொண்டிருந்தாள்.*

*பிடாரியை பௌத்த சமயம் தனது விஷக்கடி போக்கும் பச்சை தாரா அல்லது ஜாங்குலி தாராவுடன் இணைத்தது. ஆனால்*

*சைவ சமயப் பேரெழுச்சிக்குப் பின்பு பௌத்தர்களின் சாமி பெயர் நீக்கப்பட்டது. பச்சை தாரா பல இடங்களில் காளி என்ப பெயர் மாற்றம் பெற்றாள். பிடாரி, பச்சை தாரா ஆகிய பெயர்கள் மறைந்தன. காளி என்ற பெயர் நிலைத்தது.*

*பௌத்த மருத்துவ தெய்வமமான பரனஷ்வரி உருவத்தில் சமயபுரம் மாரியம்மன் சிறுவாச்சூர் மதுர காளியம்மன் போன்றோர் லலிதாசனத்தில் அமர்ந்திருப்பர். ஒரு காலை மடித்து ஒரு காலை தொங்கவிட்டு இருக்கும் இவர்களுக்கு ஆறு கைகள் அல்லது எட்டு கைகள் இருக்கும் காலடியில் அசுரன் சிலை இருக்கும்.*

## நோய் தீர்க்கும் அமிர்தம்

*மாரியம்மன், பத்திரகாளி அம்மன் என்று பெயர் சூட்டப்பட்ட பௌத்த மருத்துவப் பெண் தெய்வங்களின் வலது கையில் ஒரு மருந்து கிண்ணம் இருக்கும். இவர்களின் நோய் தீர்க்கும் சக்தியை இக்கிண்ணம் புலப்படுத்தும். இதனை நோய் தீர்க்கும் அமிர்தம் என்று பௌத்தர்கள் அழைத்தனர். ஆனால் வைதீக மரபினர் இதனை கபாலம் என்றனர். இக்கோயிலில் உள்ள ஆமை உருவம் புத்த சமயத்தில் தீர்க்காயுள், உடல்நலம், மருந்து, அமிர்தம் ஆகியவற்றைக் குறிக்கின்றது.*

## பிடாரன் வழிபாடு

*பிடாரியைக் குறிப்பிட்டது போல் பிடாரன் பற்றிய குறிப்பு எங்கும் காணப்படவில்லை. காரணம், பிடாரன் சமய வரலாற்றில் நாக தேவன்/ நாகர்கள் என்ற பெயரில் குறிக்க பெற்றான். மற்றொன்று, பிடாரன் மயானத்தில் இருக்கும் சுடலைச் சாம்பல் பூசியும், நாகங்களை உடம்பில் உலாவ விட்டுக் கொண்டும் தலையில் நாக முடி சூடியும் இருக்கிற கருப்பு நிறத் தெய்வமான சிவபெருமான் ஆக உயர் நிலை ஆக்கம் பெற்றான்.*

*கோலவிழி அம்மன் ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே பழந்தமிழர்களான நாகர் இனத்தவர் வழிபட்ட பிடாரி அம்மன் ஆவார். பின்பு பௌத்தர்கள் காலத்தில் அவர் பத்ரகாளியாக உருமாற்றம் பெற்றார். நோய் நொடி, பில்லி சூனியம், கிரக தோஷங்கள் ஆகியவற்றை அசுரர்கள் போல அழித்து ஒழிக்கின்ற*

காளியாக விளக்கினாலள். சைவ சமய பேரெழுச்சிக்குப் பின்பு கற்பகாம்பாளின் சிவத் தியானத்திற்கு உதவிய காவல் தெய்வமாக மாறினாள். இப்பகுதியில் எல்லை காளியாக கற்பகாம்பாள் கோயில் நிகழ்ச்சிகளுக்கு முன்னோடியாக இருந்து வருகிறாள்.

### கடல் ஆமை உருவம்

இந்து சமயத்தில் கடல் ஆமை பாற்கடலைக் கடைய உதவிய மந்தார மலையையும் கூர்மாவதாரத்தையும் குறிக்கின்றது. ஜைன சமயத்தில் நிலைப்பாடு மற்றும் உறுதித் தன்மையைக் குறிக்கின்றது. புத்த சமயத்தில் தீர்க்காயுள், உடல்நலம், மருந்து, அமிர்தம் ஆகியவற்றைக் குறிக்கின்றது. குளிர்ச்சியான சந்திர பிம்பமாகத் திகழும் குவான் ஜின் என்ற பௌத்தக் கடவுள் தர்மத்தின் சின்னம் ஆவார். இவர் குளிர்ச்சியான கடல் ஆமையின் முதுகில் பயணம் செய்வார். கடல் ஆமை என்பது பௌத்தத்தில் அன்பும் அறமும் நிறைந்த வாழ்க்கை வாழ்ந்து அதன் நிறைவில் ஞான ஒளி பெறுவதைக் குறிக்கிறது. அன்பு, அறம், ஞானம் என்பதன் சின்னமாக விளங்கிய ஆமையை காலமும் கருதும் துரதிர்ஷ்டம் பிடித்ததாக மாற்றிவிட்டது. ஆயினும் கோலவிழியம்மன் கோயிலில் மக்கள் குளிர்ந்த இளநீர் அபிஷேகம் செய்து குவான் ஜின்னை அவர்கள் அறியாமலேயே வணங்கி வருகின்றனர்.



**கடல் ஆமையின் மீது சாந்தமாக அமர்ந்திருக்கும் குவான் ஜின் கடவுள்**

இவ்வாறாக கோலவிழி அம்மனின் வரலாறும் வழிபாடும் வரலாற்றுக்கு முந்திய காலத்தில் தொடங்கி இன்று வரை மக்களிடம் தொட்டு நின்று நீடித்து வருகின்றது.



முனைவர் செ. இராஜேஸ்வரி

# 7. கங்கை அம்மன்

தென்சென்னையில் உள்ள காரப்பாக்கத்தில் புகழ்பெற்ற கங்கை அம்மன் ஆலயம் உள்ளது அதற்கு உள்ளே கபாலீஸ்வரர் என்ற கற்பகேஸ்வரர் ஆலயம் உள்ளது. கங்கையம்மன் இங்கு சுயம்புவாக குளத்தரங்கரையில் உள்ள ஒரு மரத்தடியில் கண்டுபிடிக்கப்பட்டு வழிபடப்படுகின்றாள். அவளைக் கண்டெடுத்த இடத்தில் ஒவ்வொரு ஆண்டும் ஊருணி பொங்கல் வைத்துக் கொண்டாடுகின்றனர். ஆடி மாதம் மகாபலிபுரத்தில் இருந்து சென்னைக்கு மாட்டு வண்டிகளில் வந்து கும்பம் எடுத்தும் பொங்கல் வைத்தும் பக்தர்கள் இந்நன்னாளைக் கொண்டாடுகின்றனர்.



**காரப்பாக்கம் கங்கையம்மன் கோயில் ராஜகோபுரம், அதன் சதுர வடிவில் மிகப்பெரிய தெப்பக்குளத்தில் தன் பிம்பத்தை படரவிட்டு கம்பீரமாக நிற்கும் காட்சி**

## பல ஊர்களில் கங்கையம்மன்

*கங்கை அம்மன் கோயில்கள் சென்னையைச் சுற்றியும் வட மாவட்டங்களில் நிறைய காணப்படுகின்றன. ரெட்டியூர், செங்குன்றம், திருப்பதி, சந்தவாசல், சூளைமேடு, அடையாறு, கொளத்தூர் போன்ற பல இடங்களில் கங்கை அம்மனுக்கு என்று தனிக் கோயில்கள் உள்ளன. இக் கோயில்களின் உள்ளே சிவனுக்கும் தனியாக ஒரு சன்னதி வைக்கும் முறை பிற்காலத்தில் இணைந்து கொண்டது. இத்துடன் முருகன் விநாயகர் தட்சிணாமூர்த்தி துர்க்கை அம்மன் விஷ்ணு ராமர் கண்ணன் என்று பல பல இந்து தெய்வங்களுக்கும் தனித்தனி சன்னதிகள் உருவாகின.*

## கங்கையம்மன் கோயிலமைப்பு

*காரப்பாக்கம் கங்கையம்மன் கோயிலின் ராஜகோபுரம் 5 நிலை கொண்டதாகும். இங்கு சதுர வடிவில் மிகப் பெரிய தெப்பக்குளம் உள்ளது. ராஜகோபுரத்தின் வழியாக உள்ளே நுழைந்ததும் இரண்டு பக்கமும் மிகப்பெரிய துவாரபாலகி சிலைகள் காணப்படுகின்றன. அவை வண்ணம் தீட்டப்பட்டு பிரகாசமாகத் தோன்றுகின்றன. அதனையடுத்து கருவறைக்குள் ஆறடி உயரத்தில் கம்பீரமாக கங்கை அம்மன் காட்சி தருகின்றாள்.*

## உருவத்தோற்றம்

*கங்கையம்மன் மாரியம்மனைப் போன்ற தோற்றம் கொண்டவள். ஒரு காலை மடித்து மறுகாலைத் தொங்க விட்டு வீராசனத்தில் அமர்ந்துள்ளாள். சமயபுரம் மாரியம்மனை போல மடியில் வைத்திருக்கும் இடது கையில் மருந்து கிண்ணம் வைத்திருக்கிறாள். இவள் தொற்று நோய் தீர்க்கும் தெய்வம் ஆவாள். வலது கை அபய ஹஸ்தம் முத்திரையுடன் காணப்படுகின்றது. பின்னிரு கைகளில் சாட்டையும் உடுக்கையும் வைத்திருக்கின்றாள்.*



## சிவன் கோயிலின் தோற்றம்

*சிவனடியார் ஒருவர் கங்கை அம்மன் கோயிலுக்குள் சிவாலயம் ஒன்றை எழுப்பினார். இங்குள்ள கருவறை நாதரின் பெயர் கபாலீஸ்வரர் அல்லது கற்பகேஸ்வரர் ஆகும். இக்கோயிலில் ஐந்து நிலை ராஜகோபுரம் உள்ளது. கங்கை அம்மன் கோயிலுக்குள் சென்றால் அதற்குப் பின்புறத்தில் இக்கோயில் உள்ளது. கற்பகாம்பாளும் கற்பகேஸ்வரரும் தனித்தனி சன்னதி கொண்டுள்ளனர்.*

## சிவன் கோயில் அமைப்பு

*காரப்பாக்கம் கபாலீஸ்வரர் கோயிலில் கொடிமரம், பலி பீடம், நந்தி தேவர் ஆகியவை முறைப்படி அமைக்கப் பட்டுள்ளன. நந்தி தேவருக்கு முன்பு கருவறை உள்ளது. அதற்குள் வட்ட ஆவுடையும் அதன் மத்தியில் சிவலிங்கமும் உள்ளது. கற்பகாம்பாள் தனிச் சன்னதி கொண்டுள்ளாள். கொடி மரத்திற்கு தெற்கே உள்ள நாகலிங்க மரத்தின் அடியில் ஆதி கற்பகேஸ்வரரும் நாகர் சிலைகளும் காணப்படுகின்றன.*



**காரப்பாக்கம் கபாலீஸ்வரர் கோயிலில் காணப்படும் சிவலிங்கம்**

## சைவம் தழைக்க முற்றோதல்

*காரப்பாக்கம் கபாலீஸ்வரர் கோயிலில் தேவாரம், திருவாசகம் முற்றோதல்கள் தொடர்ந்து நடைபெறுகின்றன. மாண்வர்கள் ஆர்வமாகப் பங்கேற்று சைவம் சமயம் தழைக்க உறுதுணையாக விளங்குகின்றனர்.*

## சிறப்பு வழிபாடுகள்

*கற்பகேஸ்வரர் சிவாலயத்தில் பிரதோஷம் தோறும் சிறப்பு அபிஷேக ஆராதனைகள் சிவபெருமானுக்குச் செய்யப்படுகின்றன. பங்குனி உத்திரத்தன்று கபாலீஸ்வரர் - கற்பகத்தம்மன் தெய்வத்திருமணம் நடைபெறுகின்றது. திருக்குளத்தில் அன்றைக்கு தெப்பத் திருவிழாவும் உண்டு. மாத சிவராத்திரி மற்றும் மாசி சிவராத்திரி ஆகிய நாட்களிலும் சோமவாரங்களிலும் வெள்ளிக்கிழமை தோறும் சாமிக்கும் அம்பிகைக்கும் சிறப்பு பூசைகள் நடைபெறுகின்றன.*

## திருச்சுற்றுச் சன்னதிகள்

*காரப்பாக்கம் கபாலீஸ்வரர் கோயிலின் திருச்சுற்றில் பல தெய்வங்களுக்கு தனித்தனியாக. விமானத்துடன் கூடிய சன்னதிகளும் உண்டு. விமானம் இல்லாதவையும் உண்டு. துர்க்கை அம்மன், ஸ்ரீதேவி பூதேவி சமேதராகிய வெங்கடேச பெருமாள், வள்ளி தெய்வானையுடன் கூடிய சண்முகநாதன், வலம்புரி விநாயகர் போன்ற பல தெய்வங்களும் இங்கு இடம்பெற்றுள்ளன. 11 அடி உயரமுள்ள பக்த ஆஞ்சநேயருக்கு மேற்கு பார்த்து தனி சன்னதி உள்ளது தனி விமானமும் கோயில் வாசலும் உள்ளது.*

*இராமர் லட்சுமணர் சீதை ஆகியோருக்கு விமானத்துடன் கூடிய தனிச் சன்னதி உள்ளது. மற்றும் தவம் இயற்றும் கபில முனிக்கும் பகீரதனுக்கும் சுதை சிற்பங்கள் காணப்படுகின்றன.*

*இக் கோயிலில் நவகிரக சன்னதி தனியாக உள்ளது. இது தவிர சனீஸ்வரருக்கும் காலபைரவருக்கும் வீர ஆஞ்சநேயருக்கும் தனித்தனி சன்னதிகள் உள்ளன. இச் சிவாலயம் காலத்தால் பிற்பட்டது. இங்கு வரும் பக்தர்களை விட கங்கை அம்மன் வணங்க வரும் பக்தர்களே அதிகம்.*



**11 அடி உயரமுள்ள பக்த ஆஞ்சநேயர்**

## சிறப்பு நேர்த்தி கடன்கள்

*கங்கையம்மன் கோயிலில் துணி முடிந்து போடும் நேர்த்திக் கடன் பழக்கத்தில் உள்ளது. நேர்ந்தது நிறைவேறியதும் முடிந்து போட்ட துணியை அவிழ்த்து விடுவது மரபு.*

*ஆடி மாதம் அம்மனுக்குரிய மாதம் ஆகும். இம்மாதத்தில் செவ்வாய்க்கிழமை மற்றும் ஞாயிற்றுக்கிழமைகளில் அதிக பக்தர்கூட்டம் இக்கோயிலுக்கு வரும். கூழ் வார்த்தல், பொங்கல் வைத்தல் போன்றவை அந்நாட்களில் நேர்த்திக் கடன்களாக நிறைவேற்றப்படும்.*

## தனிப் பெண் தெய்வங்கள்

*சமயபுரம் மாரியம்மன், சிறுவாச்சூர் காளியம்மன், புன்னைநல்லூர் மாரியம்மன், வண்டியூர் மாரியம்மன், தையல்நாயகி, கங்கையம்மன் போன்றோர் பவுத்த சமயச்*



**மகிஷாசுரமர்த்தினி**

*செல்வாக்குடன் இருந்த போது தோன்றிய தாரா என்னும் பெண் தெய்வம் ஆகும். இவள் பேய் பிசாசு தொல்லை, உடல் நோய், நீர் நெருப்பு கண்டங்கள் போன்றவற்றால் தோன்றும் எட்டு பயங்களைப் போக்குவாள். இவள் மன நோய், உடல் நோய் இரண்டையும் (Tara healing) சுகமாக்கினாள். இவளுக்கு என்று தனி மந்திர உச்சாடனங்களும் நடந்தன.*

## பயிர்த் தெய்வம்

*பச்சை தாரா பயிர் விளைச்சலுக்கு உரிய தனித் தெய்வம் ஆவாள். சைவம் செல்வாக்கு பெற்ற காலத்தில் சிவபெருமானுடன் இவளை இணைத்து கங்கை அம்மன் என்று சில ஊர்களில் வேளாண் குடிகள் போற்றினர். எனினும் பல நுற்றாண்டுகளாக மக்கள் பல பெயர்களில் புதிய கதைகளைச்*

சேர்த்து சக்தியுள்ள தனித் தெய்வமாகவே அம்மன் தெய்வங்களை வைத்து வழிப்பட்டனர். பக்தி இலக்கிய காலத்தில் இக்கோயில்கள் சிலவற்றில் சிவன் சன்னதிகள் சேர்க்கப்பட்டன. பின்பு இந்த அம்மன்கள் சிலருக்குத் ஆதி சங்கரரால் தாடங்கம் அல்லது ஸ்ரீ சக்கரம் பொருத்தப்பட்டது.

**லலிதாசனம்**

சில பெண் தெய்வங்கள் சிவன் சன்னதிகள் சேர்க்கையின்றி தனித்தே கோயில் கொண்டிருந்தனர். இவர்கள் லலிதாசனத்தில் மகாராணி போல அமர்ந்த கோலத்தில் சிலை வைக்கப்பட்டு வழிபடப்பட்டனர். வலது காலைத் தொங்கவிட்டு இடது காலை



**வெள்ளி கவசத்தால் அலங்கரிக்கப்பட்ட குடியாத்தம் கங்கையம்மன்**

*மடித்து உட்கார்ந்து இருப்பார்கள். ஒரு கையில் மருந்து கிண்ணம் நோய் தீர்க்கும் அமுதம் வைத்திருப்பார்கள். இதை கபாலம் என்று சிலர் கருத்து கூறினர். மக்கள் தங்களின் தங்கள் தேவைகளுக்கும் இவர்களை வணங்கினர். சைவம் வைணவம் செல்வாக்கு உயர்ந்த பின்பும் கூட இப்பெண் தெய்வங்கள் நாட்டுப்புறத் தெய்வங்களாக மக்கள் செல்வாக்குடன் விளங்கின. ஆனால் உருவத்தில் சில மாற்றங்கள் நிகழ்ந்தன. நாகம், உடுக்கை, கத்தி, பாசம் போன்றவை சேர்க்கப்பட்டன.*

## நிறைவு

*கங்கையம்மனும் கபாலிச்வரரும் சக்தியுள்ள தெய்வங்கள் என்பதால் இங்கு பக்தர்கள் குறிப்பாக பெண்கள் கூட்டம் கூட்டமாக வந்து வணங்கி செல்கின்றனர். திருமணம், குழந்தை பேறு, தொழில் மேன்மை, வீடு வாங்குதல், நோய் சுகமாகுதல் என சகல தேவைகளுக்கும் இக்கோயிலுக்கு வந்து வணங்குகின்றனர்.*



# 8. நிமிஷாம்பாள்

சென்னை பிராட்வேயில் உள்ள சவுகார்பேட்டையில் காசிசெட்டி தெருவில் முக்தீஸ்வரர் நிமிஷம்பாள் கோயில் உள்ளது. இப்பகுதியில் வாழும் பலர் நிமிஷாம்பாளைத் தங்கள் குலதெய்வமாக நினைத்து வணங்கி வருகின்றனர். இது தனிப்பெண் தெய்வக் கோயில் என்றாலும் வழக்கம் போல இங்கும் ஒரு சிவலிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டு முக்தீஸ்வரர் என்று அழைக்கப்படுகின்றது.

## காசிச்செட்டி தெரு நிமிஷாம்பாள்

சென்னை சவுகார்பேட்டையில் வாழும் பல வடநாட்டவர் இத் தெய்வத்தை தங்கள் இஷ்ட தெய்வமாகக் கொண்டு வணங்கி வருகின்றனர். பரபரப்பான காசிச் செட்டி தெருவில் சிறு பகுதியில் ஒரு சிறிய சன்னதியில் சிறிய விக்கிரகமாக இவ்வம்மன் வீற்றிருந்து பெரிய அளவில் இப்பகுதி மக்களுக்கு அருள் பாலிக்கின்றாள். வேறு பல மாநிலங்களிலும் நிமிஷாம்பாளுக்குக் கோயில்கள் உள்ளன. 17 ஆம் நூற்றாண்டில் கர்நாடகாவில் மும்முடி கிருஷ்ணராஜ் உடையார் என்ற மன்னர் முதன்முதலில் நிமிஷம்பாளுக்கு கோயில் கட்டினார்.

## பிற மாநிலங்களில்

கர்நாடகா, ஆந்திரா, தெலுங்கானக் மாநிலங்களிலும் நிமிஷாம்பாளுக்குத் தனிக் கோயில்கள் உள்ளன.

பெங்களூரில் அக்கி பேட், ராஜராஜேஸ்வரி நகர், கர்னூல், தவணகிரி என நான்கு இடங்களில் நிமிஷாம்பிகாவுக்கு




**காசிச் செட்டி தெருவில் அமைந்துள்ள ஸ்ரீநிமிஷாம்பாள் கோயில்**

*கோயில்கள் உள்ளன. நிஜாமாபாத், ஹைதராபாத் ஆகிய நகரங்களில் நிமிஷாம்பிகாவுக்குக் கோயில் உள்ளது.*

## பெயர்க் காரணம்

*பக்தர்களின் வேண்டுதலை நிமிஷத்தில் நிறைவேற்றுவதால் அவளுக்கு நிமிஷாம்பாள் என்று பெயர். நிமிஷம் என்றால் கண் என்று சமஸ்கிருதத்தில் பொருள்படும் பக்தர்களை கருணைக் கண் கொண்டு பார்ப்பவள் என்பதால் கிட்டத்தட்ட மீனாட்சி என்பது போல் இவளுக்கு நிமிஷாம்பாள் என்று பெயர்.*

## தேவியின் பெயர்களில் ஒன்று

*நிமிஷாம்பாள் பக்தர்களின் தீவினைக் கர்மங்களை அழிக்கும் சக்தி பெற்றவள். தேவியின் 1008 பெயர்களை வரிசையாக உச்சரிக்கும் லலிதா சகஸ்ரநாமத்தில் நிமிஷாம்பா என்ற பெயரிலும் தேவியை அழைப்பதைக் காணலாம்.*

## கதை ஒன்று

*முக்தராஜன் என்ற மன்னன் ஆட்சி பரிபாலனம் செய்து வந்த காலத்தில் மக்கள் அவனுடைய நீதியான நேர்மையான ஆட்சியின் கீழ் மகிழ்ச்சியாக வாழ்ந்து வந்தனர். அவ்வமயம் ஜானு*

சுமண்டலன் என்ற அரக்கன் முக்தராஜனின் குடிமக்களுக்குக் கொடுமைகள் செய்தான். முக்தராஜன் தன் அரண்மனையின் ஆன்றோர் சான்றோர் பெருமக்களை அழைத்து இவனை நம் நாட்டை விட்டுத் துரத்துவதற்கு என்ன செய்யலாம் என்று ஆலோசனை செய்தான். 'இவன் சிவபெருமானிடம் வரம் வாங்கி வந்து இவ்வாறு நமக்கு தொல்லை கொடுக்கின்றான். எனவே நாம் சிவபெருமானின் மனைவியாகிய உமையாளிடம் சென்று முறையிட்டால் அவள் நமக்கு உதவுவாள். அன்னையின் கருணையே பெருங்கருணை' என்றனர்.



**கோபாக்கினியில் காட்சியளிக்கும் நிமிஷாம்பாள்**

முக்தராஜன் அன்னை தனக்கு நேரில் பிரதட்சணமாக வேண்டும் என்று மிகப் பெரிய யாகம் வளர்த்தான். அவன் பக்திக்கு மெச்சி அன்னை அஷ்டபுஜ ரூபிணியாக துர்க்காதேவி எனத் தோன்றினாள். எட்டுக் கரங்களில் ஆயுதங்கள் ஏந்தி உக்ர தேவதையாகக் காட்சி கொடுத்தாள். அப்போது அவளிடம் மன்னன் 'என் குடிமக்களுக்குத் துன்பம் விளைவிக்கின்ற அசுரனை கொன்று அழிப்பாயாக' என்று வேண்டிக் கொண்டான். அன்னை பார்வதி அசுரன் இருந்த பக்கம் திரும்பி உக்கிரமாகப் பார்த்தாள். அசுரன் அம்மனின் கோபாக்கினியில் எரிந்து சாம்பாலானான்.

அடுத்து அன்னை மன்னனிடம் 'இன்னும் உனக்கு என்ன வேண்டும் ?' என்று கேட்டாள். 'எனக்குக் குழந்தை பாக்கியம் இல்லை. இந்த நாடும் நாட்டு மக்களும் வருங்காலத்தில் அரசன் இன்றித் தவிக்கக்கூடாது. எனவே ஒரு நல்ல குழந்தை வேண்டும். இந்நாட்டை ஆள ஓர் இளவரசன் பிறக்க வேண்டும்' என்று கேட்டான். உடனே பார்வதி அவன் கையில் ஒரு ஆண்

*குழந்தையைக் கொடுத்தாள். மன்னனும் மகாராணியும் அகம் மகிழ்ந்து சென்றனர். தன் கோபப் பார்வையால் ஒரே நிமிஷத்தில் அசுரனைக் கொன்றவள் என்பதால் அவளை மக்கள் நிமிஷாம்பாள் என்று அழைத்தனர்.*

## கதை இரண்டு

*நிமிஷாம்பாள் மன்னருக்குக் காட்சி கொடுத்த போது எட்டுக் கைகளிலும் ஆயுதம் ஏந்திக் காட்சி கொடுத்தாலும் சென்னைக் கோயிலில் இவள் நான்கு கரங்களுடன் சாந்தமாக அமர்ந்திருக்கும் சிலையே வழிபடு தெய்வமாக உள்ளது. அதற்கு ஒரு கதையும் வழங்குகிறது. இவள் மன்னர்களின் தெய்வம். சத்ரிய குலத்தைச் சேர்ந்தவர்கள் இவளைத் தெய்வமாக வழிபடுகின்றனர்.*

*தமிழகத்திற்கு வியாபார நிமித்தம் வந்து இங்குக் குடியேறிய வட மாநில மக்கள் தங்களுக்கு என்று இங்கு சொந்தமாக வீடுகளைக் கட்டத் தொடங்கினர். அவ்வாறு ஒருவர் வீடு கட்ட கிணறு வெட்டிய போது மண்வெட்டியில் நங்கு நங்கு என்று உலோகச் சத்தம் கேட்டது. அந்த இடத்தில் இருக்கும் மண்ணை அகற்றி விட்டுப் பார்த்தால் அங்கு நிமிஷாம்பாளின் ஐம்பொன்னால் ஆன சிலை கிடைத்தது. நம் வீட்டுக் கிணற்றில் இருந்து கிடைப்பதால் இதுவே நம் குலதெய்வம் என்று கருதி வடமாநிலத்து மக்கள்*



**நான்கு கரங்களுடன் சாந்தமாக அமர்ந்திருக்கும் அம்மன்**

*அங்கேயே அவளுக்குக் கோயில் கட்டி வழிபட்டனர். இக்கோயில் கட்டப்பட்டு சுமார் 400 ஆண்டுகள் ஆகின்றன.*

## சென்னை கோயில் அமைப்பு



நவக்கிரக சன்னதி

*நிமிஷாம்பாள் கோயில் பரபரப்பான கடைவீதிப் பகுதியில் இருந்தாலும் அக்கோயிலுக்குள் அமைதியும் தெய்வீகமும் நிலவுகிறது. அம்மன் சாந்த சொரூபியாகக் காட்சி தருகின்றாள். அவளது கருவறைக்கு மேல் விமானமும் வாசலில் மூன்று நிலை கொண்ட கோபுரம் அமைந்துள்ளது. அம்மன் சன்னதிக்கு இடப்பக்கமும் வலப்பக்கமும் விநாயகருக்கும் முருகனுக்கும் தனித்தனி சன்னதிகள் உள்ளன. பிரகாரத்தில் ஆஞ்சநேயர் சன்னதி சிவபெருமான் சன்னதி, நவக்கிரக சன்னதி ஆகியவை காணப்படுகின்றன.*

## சாந்தமாக்கினர்

*நிமிஷாம்பாள் கைகளில் ஆயுதம் ஏந்தி நிற்கும் சினம் கொண்ட சிங்கப்பெண் என்பதால் அவளது சினத்தைத் தவிர்க்கவும் ஆக்ரோஷத்தைக் குறைக்கவும் கருவறையின் முன்னே மேரு என்ற ஸ்ரீ சக்கரம் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. இதனால் அவள் ருத்திர தேவதையாக இல்லாமல் கருணை வடிவாக மாறி பக்த கோடிகளுக்கு நிமிஷத்தில் வேண்டிய வரம் வேண்டிய படியே அருள்கின்றாள்.*

## பக்தர்களின் பாசம்

*சௌகார்பேட்டையில் வாழ்கின்ற வியாபாரிகள், வடநாட்டவரும் தென்னாட்டவரும் காலையில் தங்கள் கடை மற்றும் தொழில் நிலையங்களைத் திறப்பதற்கு முன்பு அம்பாளைத் தரிசித்து வணங்கி ஆசி பெற்றுச் செல்கின்றனர். விசேஷ நாட்களில் அம்மனுக்குப் பிரசாதம் படைப்பதும் வஸ்திரம் படைப்பதும் பொதுவான நேர்த்திக்கடன்கள் ஆகும்.*

## கதை மூன்று

### அம்பாளின் தவம்

*ஜல முசுண்டனை வதம் செய்த அம்பிகை அவனைக் கொன்ற தோஷம் நீங்க கர்நாடகாவில் உள்ள ஸ்ரீரங்கப்பட்டணத்தில் ஒரு சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து வழிபட்டாள். தொடர்ந்து சிவ தியானம் செய்ததால் சிவபெருமான் அவள் தவத்தைக் கண்டு மகிழ்ந்து காட்சி அளித்தார். அம்பிகை தான் கொன்று போட்ட சிவ பக்தனான ஜல முசுண்டனுக்கு தாங்கள் முத்தி அளிக்க வேண்டும் என்று விண்ணப்பித்தாள். சிவபெருமானும் அம்பிகையின் தவத்தில் மகிழ்ந்து தன் பக்தனான ஜல முசுண்டனுக்கு முக்தி அளித்தார். இதனால் அவர் முக்தீஸ்வரர் என்று அழைக்கப்பட்டார். கர்நாடகாவில் மவுத்திகேஸ்வரர் என்று அழைக்கின்றனர்.*

## கதை நான்கு

### முக்தன் கட்டிய கோயில்

*கர்நாடகாவில் ஸ்ரீரங்கம் பட்டினம் அருகில் கஞ்சம் என்னும் இடத்தில் முக்தராஜன் கட்டிய ஈஸ்வரன் கோயில் என்பதால் முத்தீஸ்வரன் என்று கருவறை நாதர் அழைக்கப்பட்டார். ஆனால் இங்கும் நிமிஷாம்பாள் மாரியம்மன், காளியம்மன் போல தனித் தெய்வமாக இருந்து அருள் வழங்குகின்றாள். இவள் சிவனின் இணை அல்ல.*

*கர்நாடகக் கோயிலில் ஐந்து நிலை கோபுரம் உள்ளது. அம்பாள் கிழக்கு நோக்கி நான்கு திருக்கரங்களுடன் துர்க்கையின் அம்சமாக வெற்றித் தெய்வமாக போர்த் தேவதையாக கொற்றவை வடிவில் காட்சியளிக்கின்றாள். அவளது கோபத்தைக் குறைப்பதற்காக இங்கும் அவள் சிலைக்கு முன்பு ஸ்ரீசக்கரம் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. அவள் தலைக்கு மேலே தர்மசக்கரமே குடையாய் அமைக்கப் பட்டுள்ளது. முன் இரு கரங்கள் அபய வரத ஹஸ்தமாக உள்ளன.*

*தலைக்கு மேல் தர்மச் சக்கரம் இருப்பதால் இக்கோயில் பழைய தாரா தேவிக் கோயில் என்றும் ஈஸ்வரன் சன்னதி காலத்தால் பிந்தியது என்பதையும் அறிந்து கொள்ளலாம். இக்கோயிலில் காலப்போக்கில் லட்சுமி நாராயணர் சன்னதி*

விநாயகர் சன்னதி அனுமன் மற்றும் சூரியனுக்கும் தனித்தனி சன்னதிகள் கட்டடப்பட்டுள்ளன.

## சிறப்பு வழிபாடுகள்

சென்னை காசிச் செட்டி தெருவில் உள்ள நிமிஷாம்பாள் கோயிலில் அனைத்து வெள்ளிக்கிழமைகளிலும் சிறப்பு வழிபாடுகள் நடைபெறும். நிமிஷாம்பாள் ஜெயந்தி, நவராத்திரி, பௌர்ணமி ஆகிய நாட்களில் சிறப்பு அபிஷேக ஆராதனைகள் உண்டு.

## திருமணத் தடை நீங்கும்

சென்னையில் அம்மன் சன்னதிக்கு முன்பு ஐந்து நெய் விளக்கு ஏற்றுகின்றனர். அத்துடன் வாசமுள்ள மரிக்கொழுந்து மலரை அம்மனுக்குச் சூட்டி வழிபடுகின்றனர். இதனால் திருமணத் தடைகள் அகன்று விரைவில் நல்ல மணமகன் அல்லது மணமகள் கிடைப்பாள். குடும்பத்தில் வறுமை நீங்கி செல்வம் தழைக்கும். தொழிலில் மேன்மை கிடைக்கும்.

சென்னை நிமிஷாம்பாள் கோயிலில் உள்ளே நுழைந்த உடன் கருவறை நாயகி காட்சி தருகின்றாள். சுற்றுப்பிரகாரத்தில் ஸ்ரீதேவி பூதேவி உடன் கூடிய வெங்கடாசலபதிக்கு தனி சன்னதி உள்ளது. கருவறையின் முன்பு நவக்கிரக சன்னதி உள்ளது. இந்தச் சன்னதியில் சூரியன் 7 குதிரைகள் பூட்டிய தேரில் வருவது போல் சிலை வைக்கப்பட்டுள்ளது.



**சூரியன் தன் குதிரை வாகனத்தில் அமர்ந்திருத்தல்**

## நிமிஷாம்பாள் ஜெயந்தி

*வைகாசி மாதம் வளர்பிறை தசமி திதியில் நிமிஷாம்பாள் முக்த ராஜனுக்குக் காட்சி கொடுத்து அவன் வேண்டுதலை நிறைவேற்றினாள் என்பதால் அந்த நன்னாள் அவளது பிறந்த நாளாகக் கொண்டாடப் படுகின்றது. நிமிஷாம்பாள் ஜெயந்தி அன்று அம்மனுக்கு 108 கலச அபிஷேகமும் துர்கா பூஜையும் நடைபெறுகின்றன.*



**பௌத்தர்களின் காவல் தெய்வம் உஷ்ணிஷா சீதாதபத்ரா அம்மன்**

## முன் வரலாறு

*நிமிஷாம்பாள் போர்த் தேவதையாக வணங்கப்படுவதும் அவள் தலைக்கு மேல் தர்மச்சக்கரம் வெண் கொற்றக் குடையாக விளங்குவதும் அவள் பழைய தாரா தெய்வம் என்பதை உறுதி செய்கிறது. எனவே தான் அவள் தனித் தெய்வமாக விளங்குகிறாள். சிவலிங்க சன்னதி பிற்சேர்க்கை ஆகும்.*

### வெண்குடைத்தெய்வம் உஷ் நிஷா சீதா பத்ரா

*மஹாயானா, வஜ்ராயான பௌத்த பிரிவினர் தாராவின் காவல் தெய்வாம்சத்தை உஷ்ணிஷா சீதாதபத்ரா என்ற பெயரில் வணங்கினர். இப்பெண் தெய்வத்துக்குத் தர்மச் சக்கரத்தை நீதி நியாயத்தைக் குறிக்கும் வெண் கொற்றக் குடை உண்டு. சீதா என்றால் வெண்மை ஆபத்ரா என்றால் குடை. இவள் தீமையை (அசுரனை) அழித்து நன்மையை (குழந்தையை) தரும் தெய்வம் ஆவாள். இவளை வெண் குடைத் தெய்வம் (White Umbrella Goddess) என்பர். இவள் தலைக்கு மேல் தங்கத்தாலான தர்மச் சக்கரம் சுழல்வதும் உண்டு. தீமை விளைவிக்கும் எல்லா அசுரர்களையும் கொல்லும்படி புத்தர் இவளுக்குக் கட்டளை யிட்டார். இவள் தீமையை அழித்து நன்மையை அளிக்கும் பெண் தெய்வம் ஆவாள்.*



முனைவர் செ. இராஜேஸ்வரி

# 09. அரியமங்கலம் தையல்நாயகி

திருச்சியிலிருந்து தஞ்சை போகும் வழியில் ஆறு கிலோமீட்டர் தொலைவில் அரியமங்கலம் என்ற ஊரில் தையல்நாயகி அம்மன் திருக்கோயில் உள்ளது. தமிழகத்தில் பல தையல்நாயகிகள் உள்ளனர். புள்ளிருக்குவேளூர் என்ற ஊரில் உள்ள வைத்தீஸ்வரன் கோயிலில் அம்மனுக்குப் பெயர் தையல்நாயகி ஆகும். இது தவிர பொய்யாதநல்லூரில் அக்காள் தையல்நாயகியும் அரியமங்கலத்தில் தங்கை தையல்நாயகியும் கோயில் கொண்டு உள்ளனர். மேலும் புதுக்கோட்டை மாவட்டத்தில் அம்பலக்காரனேந்தல் என்ற ஊரில் ஒரு தையல்நாயகி கோயில் உள்ளது.



**பொய்யாதநல்லூரில் உள்ள அக்காள் தையல்நாயகி**

## தனித்தெய்வம் தையல்நாயகி

தையல்நாயகி என்பது சமயபுரம் மாரியம்மன், புன்னை நல்லூர் மாரியம்மன் போல் தனிப்பெரும் பெண் தெய்வமாகும். இத்தெய்வம் எந்த ஆண் தெய்வத்துக்கும் மனைவி இல்லை. ஆனால் இந்தத் தையல்நாயகி கோயிலுக்கு அருகே ஒரு சிவன் கோயில் வைத்திச்வரன் கோயில் என்ற பெயரில் கட்டப்பட்டுள்ளது.

## அம்மன் கோயில் அமைப்பு

அரியமங்கலத்தில் கிழக்கு நோக்கி அம்மனின் கருவறையும் அதற்கு எதிரே அர்த்தமண்டபம். மகா மண்டபம் போன்றவையும் உள்ளன. இடது புறம் விநாயகரும் வலது புறம் முருகனும் உள்ளனர். மகா மண்டபத்தில் தென்புறத்தில் துர்க்கைக்குத் தனிச் சன்னதி உள்ளது. தையல் நாயகி அம்மன் கோயிலுக்கு வடபகுதியில் ஆஞ்சநேயருக்கு ஒரு சன்னதியும் உள்ளது.

## அம்மனின் திருக்கோலம்

அரியமங்கலத்தில் கருவறையில் காட்சி தரும் தையல்நாயகி அம்மன் நான்கு கைகளுடன் தோன்றுகிறாள். இரண்டு கைகளில் தாமரை உள்ளது. பொதுவாகக் கஜலட்சுமி இரு மேற்கைகளில் தாமரையை பிடித்திருப்பாள். பௌத்தக் கோயில்களில் இரட்டை யானை அதிர்ஷ்டத்தின், செல்வத்தின் குறியீடாக இருந்ததால் இரட்டை யானைகளுடன் கூடிய திருமகள் செல்வத்தின் கடவுளாக வடிவமைக்கப்பட்டாள். தாமரை மலர் பௌத்த சமயத்தின் முக்கியச்சின்னம் ஆகும். திருமகளும் இரண்டு தாமரை மலர்களைக் கைகளில் கொண்டிருந்தாள். அத்தகைய சுபத் திருக்கோலத்தில் தையல் நாயகி அம்மனும் அரியமங்கலத்தில் காட்சி அளிக்கின்றாள்.



**அரியமங்கலம் தையல்நாயகி அம்மன்**

அம்மனின் கீழ் இரண்டு கரங்கள் அபய வரத ஹஸ்த முத்திரையுடன் உள்ளன. அபயம் என்பது பயப்படாதே என்று பக்தர்களுக்கு தைரியம் ஊட்டுகின்றது. வரதம் என்பது தன்

பாதத்தை நாடி வந்த பக்தர்களுக்கு வேண்டுவன வேண்டும் அளவு அருள்கின்றது. அது வரம் தரும் கை.

## வைத்தீச்வரன் கோயில்

அம்மன் கோயிலுக்கு அருகில் வைத்தீஸ்வரனுக்கு என்று ஒரு புதிய கோயில் பிற்காலத்தில் கட்டப்பட்டுள்ளது வைத்தீஸ்வரன் கோயிலிலும் மகா மண்டபம் நந்தி பலிபீடம் ஆகியவை இடம்பெற்றுள்ளன. இக் கோயில் முழுக்க முழுக்க ஒரு சைவக் கோயில் ஆகும். இதன் வடகிழக்கு மூலையில் கால பைரவர் காட்சி தருகின்றார். தெற்கே சைவக் குரவர்கள் நால்வரும் இடம் பெற்றுள்ளனர். தெற்கில் தட்சிணாமூர்த்தி காணப்படுகின்றார். வடக்கே சண்டிகேஸ்வரருக்கு தனிச் சன்னதி உள்ளது.



**வைத்தீச்வரன் கோயிலின் தெற்கே அமைந்துள்ள தட்சிணாமூர்த்தி**

## நாட்டுப்புறத் தெய்வங்கள்

அரியமங்கலம் தையல்நாயகி கோயிலில் நாகம்மா, கருப்பணசாமி போன்ற கிராமப்புறத் தெய்வங்களுக்கும் தனித்தனி வழிபாடுகள் நடைபெறுகின்றன.

## நாகர் வழிபாடு

தமிழகத்தில் தொன்று தொட்டு இருந்து வரும் நாகர் வழிபாட்டின் தொடர்ச்சியாக நாக பஞ்சமி அன்று நாகம்மைக்குச் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன. ராகு, கேது பெயர்ச்சி நாட்களில் இங்குச் சிறப்பு பூசைகளும் யாகங்களும் நடைபெறும்.

## விழாக்கள்

தையல்நாயகி கோயில் இப்போது இருக்கும் இடத்தில் முன்பு பௌத்தக் கடவுளான தாராதேவி கோயில் இருந்திருக்கும்

என்பதனை இங்கு நடக்கும் சித்ரா பௌர்ணமி விழா உறுதி செய்கின்றது. சித்ரா பௌர்ணமி விழா பௌத்தக் கடவுளான இந்திரனுக்குக் கொண்டாடப்படும் இந்திர விழாவாகும். சோழ நாட்டில் காவேரிக் கரையில் இந்திர விழா பங்குனி உத்திரம் முதல் கொண்டு சித்ரா பௌர்ணமி வரை கொண்டாடப்பட்டதாக சிலப்பதிகாரமும் மணிமேகலையும் எடுத்துரைக்கின்றன.

அரியமங்கலம் தையல்நாயகிக்குச் சித்ரா பௌர்ணமி அன்று காவேரி நதியிலிருந்து நூற்றுக்கும் மேற்பட்டவர்கள் பால்குடம் மற்றும் தீர்த்தக் குடம் எடுத்துக்கொண்டு ஊர்வலமாக வருகின்றனர். அன்று அன்னைக்குச் சிறப்பு அபிஷேகங்கள் நடைபெறுகின்றன. அன்று இரவு நடைபெறும் அன்ன தானத்தில் ஏராளமானோர் கலந்து கொண்டு தெய்வ பிரசாதமாக அன்னதான உணவை உண்கின்றனர்.

## சிறப்பு வழிபாடுகள்

ஆடி மாதத்தில் வெள்ளிக்கிழமைகளில் தையல்நாயகிக்குச் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன. நவராத்திரி ஒன்பது நாளும் பெண் தெய்வத்திற்குரிய நாட்கள் என்பதனால் அந்த



**நாக பஞ்சமி அன்று சிறப்பு அபிசேகம்**



**சித்ரா பௌர்ணமி விழாவில் சிறப்பு அலங்காரத்துடன் தையல்நாயகி**

*ஒன்பது நாட்களிலும் தையல்நாயகி சிறப்பான அலங்காரத்துடன் காட்சி தருகின்றாள்.*

## கலச பூஜை

*தனிப் பெண் தெய்வங்கள் இருக்கும் கோயில்களில் தாந்திரீக அடிப்படையில் கலச பூஜை 3,5,9 என்ற எண்ணிக்கைகளில் கலசம் வைத்து இன்றும் நடைபெறுகின்றது. அமாவாசை சிவனுக்குரிய நாளாகவும் பௌர்ணமி அம்பாளுக்குரிய நாளாகவும் கருதப்படுவதால் பௌர்ணமி நாட்களில் அம்மனுக்குக் கலச பூஜை நடைபெறுகின்றது. இக்கோயிலில் மூன்று கலசங்கள் வைத்து அதில் மஞ்சள் நீரை நிரப்பி சிறப்பு வழிபாடுகள் செய்கின்றனர்.*

*தாந்திரீகச் சமய நெறியில் கலச பூஜை என்பது பெண் தெய்வ வழிபாட்டுக்குரிய யோனி வழிபாடு ஆகும்.*

## நோய் தீர்க்கும் நேர்த்திக்கடன்

*தையல்நாயகி கோயிலின் மகா மண்டபத்தில் உள்ள ஒரு இடத்தில் பக்தர்கள் தங்களுக்கு வரும் மறு, பரு, பால் பரு, தேமல் போன்ற தோல் நோய்கள் குணமாக உப்பும் மிளகும் காணிக்கையாகச் செலுத்துகின்றனர். உடம்பில் கட்டிகள்*

தோன்றினால் வெல்லக்கட்டி வாங்கி வந்து வைக்கின்றனர். வெல்லம் கரைந்து போவது போலத் தங்கள் உடம்பில் தோன்றிய கொழுப்பு கட்டிகளும் வேனல் கட்டிகளும் கரைந்து போகும் என்று பக்தர்கள் நம்புகின்றனர். இத்தகைய வழிபாடு மற்ற சில ஊர்த்தெய்வக் கோயில்களிலும் காணப்படுகின்றது. பிரதிஷ்டை செய்யப்பட்ட வைதீகக் கோயில்களில் காணப்படுவதில்லை.

பௌத்தர்கள் தங்கள் மடாலயங்களில் மருத்துவ சேவை செய்து வந்தனர். இம்மடாலயங்கள் இருந்த இடங்களில் புதிய கோயில்கள் தோன்றிய போது மருத்துவம் சார்ந்த செயல்பாடுகளும் புதிய கோயில்களில் பிரார்த்தனைகளாக நேர்த்திக் கடன்களாகத் தொடர்கின்றன.

நாகர் வழிபாடு, குறிப்பாகப் பின்னிப் பிணைந்து இருக்கும் அரவங்களின் வழிபாடு குழந்தைப்பேறு வேண்டுவோருக்கு உரிய சிறப்பு வழிபாடாக வரலாற்றுக்கு முந்தைய காலத்தில் இருந்து தொன்று தொட்டு நிகழ்ந்து வருகின்றது. அரச மரத்தை மற்றும் வேப்ப மரத்தைச் சுற்றி வரும் போதும் இலைகளின் நுனி பூமியை நோக்கி இருப்பதனால் பூமியின் ஆகர்ஷன சக்தி அதிகமாக இலைகளுக்குக் கிடைக்கின்றது. இதனால் வேப்பம் மர இலைகளும், அரசமர இலைகளும் அதிக அளவில் பிராண வாயுவை வெளியேற்றுகின்றன. இப் பிராணவாயு மரங்களைச் சுற்றிவரும் பெண்களுக்கு அதிக அளவில் கிடைப்பதனால் அவர்களுக்குக் கரு உருவாவதற்கு வாய்ப்புகள் அதிகம் .

புற்று இருக்கும் இடங்களில் பெண்கள் அப்புற்றினைச் சுற்றி வரும் போது புற்றின் நுண் மணல் அவர்களின் பாதத்தில் முடிவுற்றிருக்கும் சகல நரம்புகளையும் அழுத்துவதால் உடல் முழுக்க நரம்பு மண்டலம் சிறப்பாக செயல்படுகின்றது. இதனால் கர்ப்பமண்டலமும் விரைவாக செயல்பட்டு கரு உற்பத்தியாகின்றது.

அரச மரத்தின் கீழ் இருக்கும் பாம்புப் புற்றுகள் கறையானின் புற்றுகள் ஆகும். (கறையான் புற்று வைக்க கருநாகம் குடி புகுந்த கதையாக) நாகங்களுக்குப் புற்று வைக்க தெரியாது. கரையான்



**குழந்தை வரம் கேட்டு பெண்கள் அரச மரத்தடியில் பின்னிப் பிணைந்து இருக்கும் அரவங்களை வழிபடுதல்**

புற்றுகளில் நாகங்கள் குடியேறும். இந்நாகங்கள் புற்றுக்களைச் சுற்றி வலம் வருவதால் இம் மண்ணை மிதித்து சுற்றி வரும் பெண்களுக்குக் கரு உற்பத்தியாக உதவும். இந்த அறிவியல் அடிப்படையில் எங்கும் நாகர் வழிபாடு குழந்தைப் பேறு வழிபாடாக பல நூற்றாண்டுகளாகத் தொடர்கின்றது.

தையல்நாயகி அம்மன் கோயிலில் அரச மரத்தைச் சுற்றி வந்து பெண்கள் அம்மரத்தில் தொட்டிலை கட்டி விடுகின்றனர். இவ்வாறு 48 நாட்கள் (ஒரு மண்டலம்) அரச மரத்தைக் காலை வேளையில் சுற்ற வேண்டும். இவர்களுக்குக் குழந்தை பிறந்ததும் அம்மனுக்குப் புதுச் சேலை வாங்கிச் சார்த்தித் தொட்டிலைக் கழற்றி விடலாம்.

## ராகு கால பூஜை

வைத்தீச்வரன் கோயிலில் உள்ள துர்க்கைக்கு செவ்வாய் வெள்ளிக்கிழமைகளில் ராகு காலப் பூஜை சிறப்பாக நடைபெறுகின்றது. இதுவும் நாகர் வழிபாட்டுடன் இணைந்ததாகும். பைரவருக்கு தேய்பிறை அஷ்டமியின் போது சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன.

## கதை ஒன்று

*தையல்நாயகி என்ற பெயரில் இரண்டு சகோதரிகள் இருந்தனர். இருவரும் தன் ஊரை விட்டு தெற்கு நோக்கிக் கிளம்பி வந்தபோது கரிசல் நிலத்தின் வழியாக நடந்து வந்தனர். அப்போது ஒரு தையல்நாயகி கரிசல் நிலத்திலேயே தங்கிவிட்டாள். இன்னொருத்தி புஞ்சைப் பூமிக்கு நடந்து வந்துவிட்டாள். அங்கு வந்து திரும்பிப் பார்த்தால் தன்னுடைய சகோதரி தன்னைத் தொடர்ந்து வரவில்லை என்று தெரிந்தது. 'ஏனக்கா அங்கேயே நின்று விட்டாய்?' என்று கேட்டாள். 'எனக்கு இந்த இடம் பிடித்திருக்கிறது. நான் இங்கேயே கோயில் கொள்கிறேன்' என்று அக்கா சொல்லிவிட்டாள். எனவே கரிசல் நிலத்தின் தையல்நாயகி பொய்யாத நல்லூரில் தங்கிவிட்டாள். புஞ்சை நிலத்துக்கு வந்த தையல்நாயகி தற்போது வைத்தீஸ்வரன் கோயில் கட்டப்பட்டிருக்கும் அரியமங்கலத்தில் தங்கி விட்டாள்.*

## கதை இரண்டு

*அரியமங்கலத்துத் தையல்நாயகி கோயிலுக்கு வந்த கபிஸ்தலம் பண்ணையார் தனக்கு 100 வேலி நிலமும் தையல்நாயகி கோயிலுக்கு 95 வேலி நிலமும் இருப்பதாக அறிந்து தேவியை விடத் தனக்கு கூடுதலாக நிலம் இருக்கக் கூடாது என்ற காரணத்தினால் தனது ஐந்து வேலி நிலத்தை கோயிலுக்கு எழுதி*



**வைத்தீச்வரன் கோயில்**



**சந்தன அலங்காரத்தில் தையல்நாயகி - பொய்யாத நல்லூர்**

*வைத்தார். இதனால் தையல்நாயகிக்கு 100 வேலி நிலமும் அவருக்கு 95 வேலி நிலமும் உடைமை ஆயிற்று.*

### பக்திப் பாடல்கள்

*தையல்நாயகி கோயில் சைவ திருத்தலம் கிடையாது. தேவாரத் திருத்தலமும் கிடையாது. எனவே சைவ சமய குரவர்களோ வேறு சிவ பக்தர்களோ அம்மன் பக்தர்களோ அக்காலத்தில் தையல்நாயகியின் பெயரால் பக்தி இலக்கியம் எதுவும் இயற்றவில்லை. 19ஆம் நூற்றாண்டுக்கு பிறகு தான் தையல்நாயகி அம்மன் பேரில் பல நூல்களை இயற்றியும் பாடியும் வருகின்றனர். தையல்நாயகி அம்மன் பாடல், தையல் நாயகி பாமாலை, தையல் நாயகி பதிகம் என்று பல பக்தி நூல்கள் இயற்றப்பட்டுள்ளன.*



# 10. பாடி படவேட்டம்மன் (கொற்றவை - ஆவுடை - ரேணுகா தேவி)

சென்னையில் பாடி என்ற பகுதியில் முக்கிய சாலையில் இக்கோயில் அமைந்துள்ளது. படைவீட்டு அம்மன் என்ற பெயர் படவேட்டம்மன் என்று மாறியுள்ளது. படை வீடு என்றால் போர்ப் பாசறை. போருக்குச் செல்லும் வீரர்கள் தங்கி இருக்கும் இடம். இவர்கள் தங்களின் வெற்றிக்காக வணங்கிச் சென்ற கொற்றவைத் தெய்வமாக படைவேட்டம்மன் விளங்குகிறார். இதற்கு ஒரு செவி வழிக் கதையும் உள்ளது. படவேட்டம்மன் கோயில்கள் திருவள்ளுவர் மாவட்டத்தில் வடமதுரை என்ற




**சென்னையில் பாடி என்ற பகுதியிலுள்ள படைவீட்டு அம்மன் கோயில்**

ஊரிலும் காஞ்சிபுரம் மாவட்டத்தில் வடக்கப்பட்டு என்ற ஊரிலும் குரோம்பேட்டிலும் உள்ளன.

## உருண்டு வந்த தலை

சென்னையிலிருந்து திருப்பதிக்கு மாட்டு வண்டியில் சென்று கொண்டு இருந்த சிலர் வழியில் ஒரு கல் வட்டமாக உருண்டு ஓடுவதைப் பார்த்தனர். அதனைத் தொடர்ந்து சென்ற போது அந்தக் கல், சாலை ஓரத்தில் ஒரு இடத்தில் நின்று விட்டது. அந்த கல்லைக் கூர்ந்து கவனித்த போது அது ஒரு அம்மனின் முகம் என்பது தெரிந்தது. அப்போது அங்கு ஆடு மேய்த்துக் கொண்டிருந்த ஒரு பெண்ணின் மீது சாமி வந்து ‘நான் சோழ மன்னரின் படைவீட்டு அம்மன். எனக்கு இங்குக் கட்டப் பட்டிருந்த கோயில் காலப்போக்கில் அழிந்து போய்விட்டது. எனக்கான இடத்தைத் தேடி நான் உருண்டு கொண்டே வருகின்றேன். இன்னும் சிறிது தூரம் சென்றால் அங்கு ஒரு வேப்பமரம் இருக்கும். அதற்கு அடியில் என்னை வைத்து வழிபட்டு வந்தால் உங்கள் அனைவருக்கும் நான் நல்லது செய்வேன்’ என்று கூறியது.



**முகம் மட்டுமே உள்ள படைவீட்டு அம்மன்**

## வேப்ப மரத்தடியில்

அம்மனின் அருள் வாக்குக் கேட்ட மக்கள் அருகில் இருந்த வேப்ப மரத்தின் அடியில் அம்மனின் முகத்தை மட்டும் வைத்து

*வழிபடத் தொடங்கினர். வேப்ப மரத்தின் அடியில் வைக்கப் பட்டுள்ள அம்மன் முகத்திற்கு அக்கினி மகுடமும் இல்லை. அதன் தலையின் மீது நாகங்கள் படம் எடுக்கவும் இல்லை. வெறும் முகம் மட்டுமே உள்ளது ஆயினும் படைவீட்டு அம்மனை வெறும் தலை மட்டுமே வைத்து வழிபடப்படுவதால் இதனை கருமாரி மற்றும் ரேணுகா தேவி அம்மனுடன் இணைத்துவிட்டனர்.*

**அத்தி மரச்சிலை**

*அம்மன் முகம் அருகில் அத்தி மரத்தால் செய்யப்பட்ட அம்மனின் முழு உருவச்சிலை ஒன்று உள்ளது. இவ்விரண்டின் எதிரே ஒரு முனிவரின் சிலை உள்ளது. அம்மனின் முகம் மற்றும் முனிவரின் சிலை ஆகிய இரண்டையும் இணைத்து இவ் அம்மனை ரேணுகாதேவி அம்மன் என்றும் எதிரே இருக்கும் முனிவர் சிலையை பரசுராமர் என்றும் மக்கள் கருதுகின்றனர்.*

**ரேணுகா தேவி அம்மன் கதை**

*ஜமதக்னி முனிவரின் மனைவியான ரேணுகாதேவி மிகப்பெரிய சாம்ராஜ்யத்தை ஆட்சி செய்த மன்னனின் மகள் ஆவாள். அவள் ஜமதக்னி முனிவரையே திருமணம் செய்ய வேண்டும் என்று விரும்பியதால் மன்னர் குடும்பத்தார் அவளை இம்முனிவருக்குத் திருமணம் செய்து கொடுத்தனர். முனிவர் அவளிடம் 'இனி நீ இளவரசி போல இந்தக் காட்டில் வாழ முடியாது. இந்தக் குடிலில் என்னுடைய மனைவியாக எளிமையான வாழ்க்கை நடத்த வேண்டும்'. என்றார். அவளும் ஒப்புக்கொண்டாள்.*

*ரேணுகாதேவி ரிஷி பத்தினியாக வாழ்ந்து வரும் நாளில் அவள் தினமும் காலையில் ஆற்றுக்குப் போய் அங்கிருக்கும் பச்சை மண்ணை எடுத்துப் பானை வனைந்து அதில் புதுத் தண்ணீர் கொண்டு வந்து தன் கணவரின் பூஜைக்குக் கொடுப்பாள். ஒரு நாள் அவள் அவ்வாறு ஆற்றுக்குப் போன வேளையில் ஆற்று நீரில் வானத்தில் சென்று கொண்டிருந்த கந்தர்வனின் பிம்பம் தெரிந்தது. இவ்வளவு அழகான ஒருவனா என்று ரசித்தபடி அவனைப் பார்த்து வியந்தாள்.*

ஆகாயத்தில் கந்தர்வனின் புஷ்ப விமானம் போய் மறைந்ததும் அவள் ஆற்று மணலை எடுத்துப் பானை செய்யத் தொடங்கினாள். பானை வரவில்லை. தன் கணவன் அல்லாத வேறு ஆண்மகனைக் கண்டு அவன் அழகை ரசித்த காரணத்தினால் அவள் வனைந்த போது பானை உருவாகவில்லை. பெண்களுக்குரிய நால்வகைப் பண்புகளில் பயிர்ப்பு என்னும் சிறந்த பண்பை இழந்துவிட்டாள். ஆற்று மண் உதிர்ந்து கொண்டே இருந்தது. அது கெட்டிப்பட்டு பானையாக உருப்பெறவில்லை. அவள் அழுது கொண்டே ரிஷியின் குடியிலுக்கு வந்தாள்.




**படவேட்டம்மன் கோயிலில் அமைந்துள்ள ரேணுகா பரமேஸ்வரி அம்மன் சன்னதி**

ரேணுகாதேவி தண்ணீர் கொண்டு வராததைக் கண்ட ரிஷி என்ன நடந்தது என்பதை தன் ஞான திருஷ்டியால் புரிந்து கொண்டார். ஜமதக்னி தன் மனைவியின் கற்பு மாசுபட்டதை அறிந்து ஆத்திரம் கொண்டார். இனி இவளைத் தானோ தான் சம்பந்தப்பட்ட எந்தப் பொருளோ தீண்டக்கூடாது தொடக்கூடாது என்ற முடிவில் தன் மகனை அழைத்து உன் தாயை வெட்டிக் கொல். அவள் கந்தர்வனைப் பார்த்துத் தன் கற்பை இழந்தாள் என்றார். அதிர்ச்சி அடைந்த மகன் தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை என்பதால் தந்தையின் கட்டளைக்கு இணங்கினான். தன் மகன் தன்னைக் கொல்ல முடிவெடுத்து விட்டான் என்பதை அறிந்த ரேணுகாதேவி ‘மகனே நீ என்னைக் கொல்லாதே. அந்தப் பாவம் உனக்கு வரவேண்டாம்’ என்று சொல்லி ஓடினாள்.

*உயிருக்காக ஓடி வரும் ரேணுகாதேவிக்கு இரு சாதியினர் அடைக்கலம் கொடுத்தனர். ஆனாலும் அங்கும் அவளைத் தேடி பரசுராமன் கத்தியோடு வந்து நின்றான். அவன் தன் தாயை வெட்ட வந்த போது குறுக்கே பாய்ந்து தடுத்த ஒரு சலவை தொழிலாளிப் பெண்ணை முதலில் வெட்டிப் போட்டான். சலவைத் தொழிலாளியின் குடிசைக்குள் ஒளிந்திருந்த தன் தாயைக் கண்டுபிடித்து வெளியே இழுத்துக் கொண்டு வந்து வாசலில் வைத்து வெட்டிப் போட்டான். இரண்டு பெண்களும் தலை வேறு முண்டம் வேறாக அங்குக் கிடந்தனர்.*

*பரசுராமன் தன் தாயை வெட்டிய அரிவாளோடு தன் தந்தையிடம் திரும்பி வந்தான். ஜமதக்னி முனிவர் 'நல்லது செய்தாய். உனக்கு வேண்டியதைக் கேள்' என்றார். மகன் தந்தையைப் பார்த்து 'நன்றி தந்தையே எனக்கு என் தாயார் வேண்டும்' என்றான். முனிவர் அதிர்ந்து போனார். அவளைப் போய் அம்மா என்று சொல்கிறானே என்ற அதிர்ச்சி அவர் மனதுக்குள் தோன்றியது. ஒருவனுக்கு ஒரு தாய் தானே இருக்க முடியும்! எனவே அவன் தன் தாயைக் கேட்பதில் வியப்பொன்றுமில்லை என்பதை உணர்ந்து புண்ணிய தீர்த்தத்தை அவனிடம் கொடுத்து 'இதைத் தெளித்து உன் தாயை உயிரோடு எழுப்பு' என்றார்.*

*பரசுராமன் கையில் தீர்த்தத்துடன் வேக வேகமாக ஓடி வந்தான். தன் தாயும் சலவை தொழிலாளிப் பெண்ணும் வெட்டப்பட்டு கிடக்கும் இடத்திற்கு வந்து முகத்தையும் உடலையும் எடுத்து ஒட்ட வைத்தான். தீர்த்தத்தைத் தெளித்தான். இருவரும் உயிர் பெற்றனர். ஆனால் உடலும் தலையும் வெவ்வேறாக இணைக்கப்பட்டிருந்தது. இனி யாரைத் தாய் என்று அழைப்பது என்று குழம்பினான். அவன் தன் தாயின் முகத்தை மட்டும வைத்து அவளைத் தெய்வமாக வழிபடத் தொடங்கினான்.*

## மாரியம்மன் கதை

*ரேணுகா தேவி கதை ஒரு புராணக் கதை. ஆந்திரா, தெலுங்கானா, கர்நாடகா போன்ற மாநிலங்களில் இவளை சீதள*

*தேவி என்பர். தமிழகத்தில் இக்கதையை 16ஆம் நூற்றாண்டில் மாரியம்மன் கதையாக வளர்த்தனர்.*

*ஜமதக்னி முனிவர் இறந்ததும் ரேணுகாதேவி உடன்கட்டை ஏறினாள். அப்போது மழை பெய்து நெருப்பு அணைந்தது. அவளது ஆடைகள் கரிந்து போயின. உடலில் தீ கொப்புளங்கள் தோன்றின. அவள் அங்கிருந்த வேப்ப மரத்தின் இலைகளை ஆடையாக உடுத்திக் கொண்டு வெளியே வந்தாள். இதனால் மாரியம்மன் கோயில்களில், ஜன்கு படவேட்டம்மன் கோயிலிலும் வேப்பிலை ஆடை உடுத்திக்கொண்டு வந்து நேர்த்தி கடன் செய்கின்றனர். அம்மை வந்தவர்கள் மாரி அம்மனுக்கு செய்யும் நேர்த்திக் கடன்களை எல்லாம் இங்குப் படவீட்டு ரேணுகா தேவி அம்மனுக்கும் செய்கின்றனர். ரேணுகாதேவி கதையையும் மாரியம்மன் கதையையும் ஒன்று சேர்த்து ஒரே அம்மனாக தற்போது வட தமிழகத்தின் பல பகுதிகளில் கூறி வணங்கி வருகின்றனர்.*



**பீகார் மாநிலத்தில் அமைந்துள்ள சீதள தேவி அம்மன்**

## வழிபாட்டுச் சடங்குகள்

*படவீட்டம்மன் கோயிலில் பக்தர்கள் தலைமுடி காணிக்கை கொடுக்கின்றனர். மாவிளக்கு ஏற்றுகின்றனர்.*

## பாணலிங்கம்

*ஏழாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த ஆதி சங்கரர் ருத்ர தேவதைகள் வழிபடப்பட்ட இடங்களுக்குச் சென்று அவற்றின் தீட்சண்யத்தைக் குறைக்க தாடங்கம் அணிவித்தல், ஸ்ரீ சக்கரம் பதித்தல், பாணலிங்கம் பிரதிஷ்டை செய்தல் போன்ற செயல்களைச் செயதுள்ளார். அவ்வாறு இங்கும் அம்மனின் வீரியத்தை அடக்க லிங்கம் வைக்கப்பட்டது. பாண லிங்கம் என்பது ஆவுடை இல்லாத லிங்கம் ஆகும். இஃது ஆற்றல் மிக்க வீரியம் மிக்க லிங்கம் ஆகும்*




**படைவீட்டம்மன் ஆலயத்தில் அமைந்துள்ள ஸ்ரீதேவி கருமாரி அம்மன் சன்னதி**

## கோயில் அமைப்பு

*படவீட்டம்மன் கோயிலில் வேப்ப மரத்தின் கீழ் அம்மனின் சிரசு கருவறைத் தெய்வமாகக் காட்சி அளிக்கின்றது. அம்மன் முன்பு எருது உள்ளது. அதன் அருகில் விநாயகர் மற்றும் முருகனுக்கு தனிச் சன்னதிகள் உண்டு. கருமாரி அம்மனுக்கு ஒரு தனிச் சன்னதி உள்ளது. படவேட்டம்மன் உற்சவ மூர்த்தியாக நாகங்கள் குடை பிடிக்கும் ஓர் அம்மன் சிலை வைக்கப்பட்டுள்ளது. அருகே நாகங்களுக்கும் தனியாக ஒரு சன்னதி உள்ளது. கோயில் நாகம் ஒன்றும் உள்ளது. அது எல்லோர்*

*கண்களுக்கும் தெரிவதில்லை. ஒரு முனிவருக்குத் தனிச் சன்னதி உள்ளது. ரேணுகாதேவி கதையினர் இவரைப் பரசுராமர் என்பர். இது பரசுராமர் பிறந்த புண்ய க்ஷேத்திரம் என்றும் கூறுவர். (பரசுராமர் கதை வட நாட்டில் தோன்றிய புராணக் கதை என்பதால் அக்கதை பிற்சேர்க்கை என்பது தெளிவாகின்றது.)*

**பிரசாதம்**

*படவேட்டம்மன் கோயிலில் அருகில் இருக்கும் ஒரு இடத்திலிருந்து கொண்டு வரப்படும் மண் பிரசாதமாக வழங்கப்படுகின்றது. வருடா வருடம் ஆனித் திருமஞ்சனம் நடைபெறும் நாளன்று குறிப்பிட்ட அந்த இடத்திற்குச் சென்று அங்குப் பூமியில் பூத்திருக்கும் மண்ணை வெட்டி எடுத்துக் கொண்டு வருகின்றனர். அந்த மண்ணைப் பக்தர்களுக்கு பிரசாதமாகக் கொடுக்கின்றனர். நோயால் பாதிக்கப்பட்ட பெரியவர்களும் குழந்தைகளும் இம்மண்ணைத் தண்ணீரில் கலந்து அருந்தி குணம் அடைகின்றனர்.*



**படவீட்டம்மன் கோயிலில் வேப்ப மரத்தின் கீழ் அம்மனின் சிரசு**




**படவீட்டம்மன் கோயிலில் அமைந்துள்ள விநாயகர் சன்னதி**

*சங்கரன்கோயிலில் புற்று மண்ணை இதுபோன்று பிரசாதமாகக் கொடுக்கின்றனர். புற்று மணல் பல நோய்களைக் குணமாக்குகின்றது.*

## நேர்த்திக்கடன்கள்

*படவேட்டம்மன் கோயிலில் தங்களுடைய வேண்டுதல் நிறைவேறியதும் எடைக்கு எடை நாணயம் செலுத்துகின்றனர். இங்கு வரும் பக்தர்களுக்கு அன்னதானம் செய்கின்றனர். அம்மனுக்குக் கண்மலர் சாத்தும் பழக்கமும் இங்கு உள்ளது. தமது வேண்டுதல் நிறைவேறினால் வேப்பிலை ஆடை உடுத்தி கோயிலை வலம் வருகின்றனர். அங்கப்பிரதட்சணம் செய்தும் வேண்டுதலை நிறைவேற்றுகின்றனர்.*

*குழந்தை இல்லாதவர்கள் இங்குத் தொட்டில் கட்டி விட்டு குழந்தை பிறந்ததும் இங்கு வந்து குழந்தைக்கு மொட்டை*

அடித்து, காது குத்துகின்றனர். ஆடு, சேவல் பலியிடும் வழக்கமும் உள்ளது. உடம்பில் மறு, பரு ஆகியவை குணமாவதற்கு வெல்லமும் மிளகும் வாங்கிக் காணிக்கையாகச் செலுத்துகின்றனர். கோடி தீபம் ஏற்றுவதும் இத்தலத்தின் சிறப்பு நேர்ச்சை ஆகும்.

## சிறப்பு வழிபாடுகள்

அம்மனுக்கு உகந்த வெள்ளிக்கிழமைகளில் சிறப்பு பூஜைகள் நடைபெறுகின்றன. மாதந்தோறும் பௌர்ணமி அன்று அம்மனுக்குச் சிறப்பு அபிஷேக ஆராதனைகள் நடைபெறும். தமிழ் மாதப் பிறப்பன்று சிறப்பு வழிபாடுகள் நடைபெறும். நவராத்திரி நாட்களில் சிறப்பு வழிபாடுகள் உண்டு. ஆடி மாதத்தின் அனைத்து வெள்ளிக்கிழமைகளிலும் பக்தர்கள் கூட்டம் அலைமோதுகின்றது.

## முன் வரலாறு

படைவீட்டு அம்மன் வீர யுகக் காலத்தில் படை வீரர்கள் வெற்றி வேண்டி வணங்கிய கொற்றவை ஆவாள். பௌத்த சமயம் பரவிய பிறகு இத்தலம் சக்தி தலம் ஆயிற்று.

## அத்தி மரச்சிலை

அம்மன் அருகில் உள்ள அத்தி மரச்சிலை ஆய்வுக்குரியது. அத்தி மரம் கௌதம புத்தர் ஞானம் பெற்ற மரம் என்பர். அரச மரத்தின் ஒரு வகை அத்தி மரம்( Fig Religiosa) ஆகும். இதனால் அத்தி மரத்தில் பௌத்தர்கள் தம் சாமிச் சிலைகளை செய்தனர். அவர்கள் தம் சிலைகளுக்கு



**பக்தர் நேர்த்திகடனுக்காக அம்மன் உருவத்தை சுமந்து செல்லுதல்**

அபிஷேக ஆராதனைகள் செய்வதில்லை. எண்ணெய் மட்டும் பூசுவர். பூவும் புகையும் லயமும் ஒளியும் உண்டு. தீப தூப ஆராதனைகள், தாமரை பூக்களைப் படைத்தல், இசைக்கருவிகள் இசைத்தல், மணி ஒலித்தல் போன்றவை உண்டு. இவர்களின் அத்திமரச் சிலைகளைப் பின் வந்த வைதீக பேரெழுச்சியின் போது எரித்து விட்டனர். அவற்றில் ஒன்றிரண்டு தற்போது மிஞ்சியுள்ளன. காஞ்சி வரதராஜர், திருத்தங்கள் பெருமாள் கோயில்களில் அத்திமரச் சிலைகள் பாதுகாக்கப்படுகின்றன.

துறவிகள் வாழ்ந்த பௌத்த மடாலயங்களில் அவர்கள் நினைவாகச் சிலை செய்து வைத்தனர். அவர்களை பின் வந்தவர்கள் புராணங்களில் வரும் ஏதேனும் ஒரு ரிஷி பெயரைச் சூட்டி அழைத்தனர். கதைகளும் தோற்றுவித்தனர்.

பாணலிங்கம் மட்டும் படவேட்டம்மன் கோயிலில் பாணலிங்கம் மட்டும் உள்ளது. அதாவது சிவலிங்கத்தின் கந்துப் பகுதி (தூண்) மட்டும் உள்ளது. அதனைத் தாங்கி நிற்கும் ஆவுடை என்ற யோனிப் பகுதி காணப்படவில்லை. பாணலிங்கம் என்பது சிசுனம் அல்லது சிசுன தேவர் என்று அழைக்கப்படும் ஆணுறுப்பைக் குறிக்கும் லிங்கம் ஆகும். இதற்குக் கீழே உள்ள (மற்ற சிவலிங்கங்களில் காணப்படும்) ஆவுடை என்பது இங்கு இடம்பெறவில்லை. ஆவுடை இருந்தால் மட்டுமே சிவலிங்கத்தின் வீரியத்தைத் தாங்கிக் கொள்ள முடியும். இதனை ஒரு புராணக் கதையின் மூலம் தெளிவு பெறலாம்.

## சிசுனத்தின் வீர்யம்

ஒருமுறை ரிஷி பத்தினிகளை சிவபெருமான் நிறை (கற்பு) அழித்ததனால் ரிஷிகள் அவருடைய ஆணுறுப்பைத் துண்டித்து விட்டனர். அந்த உறுப்பு அமைதி அடையாமல் தரையில் விழுந்து அக்கினியாக அதிக வெப்பத்துடன் துள்ளிக் கொண்டிருந்தது. அதன் வெப்பத்தை சகிக்க இயலாமல் பூலோகமும் மேலோகமும் தகித்தன. வெப்பத்தால் வெந்தன. துடித்துக் கொண்டிருந்த சிவனின் சிசுனத்தைப் பார்வதி தன்னுடைய யோனிக்குள் ஏற்றுக் கொண்டாள். அதன் பின்பு பூலோகமும் மேலோகமும்




**அருள்மிகு ஸ்ரீபடவீட்டம்மன் தேவி மூலஸ்தானம்**

*சாந்தமாயின. பாண லிங்கத்தின் வெப்பத்தைத் தாங்கக் கூடிய சக்தி அம்பாளின் ஆவுடைக்கு மட்டுமே உண்டு என்பதால் இரண்டையும் சேர்த்தே வைத்தனர். காஞ்சியில் (பௌத்த தலம்) ஆவுடை தனித்திருக்கும். படவேட்டம்மன் கோயிலில் அம்பாளே அதீத சக்தி உடைய ஆவுடையாக விளங்குவதால் அங்குப் பாண லிங்கம் மட்டும் இடம்பெற்றுள்ளது எனத் தெளியலாம்.*

### பௌத்த தாந்திரீகத் தலம்

*ரேணுகாதேவி கதைக்கு முந்தைய நிலையை ஆராய்ந்தால் இக்கோயில் சாக்த வழிபாட்டுக்குரிய சக்தி ஸ்தலமாகும். அதனால் தான் முக்கிய சக்தி ஸ்தலங்களில் ஒன்று என்கின்றனர். மொட்டை அடித்தல், வெல்லம் மிளகு போடுதல் போன்றன பழைய பௌத்தத் தலங்களின் வழிபாட்டு முறைகளின் தொடர்ச்சி ஆகும். அத்தி மரச்சிலையும் ரிஷி (துறவி) சிலையும்*

இருப்பதால் இக்கோயில் முன்பு தாந்திரீக பௌத்தர்களின் ஆவுடை வழிபாட்டுத் தலமாக இருந்திருக்கும்.

## சங்ககாலம், பௌத்தர்காலம், சைவர்காலம்

கிமு முதலாம் நூற்றாண்டில் கொற்றவையாக படைவீரர்களால் வணங்கப்பட்டு வந்த படை வீட்டம்மன் என்ற இப்பெண் தெய்வம் பௌத்த சமயம் செல்வாக்கு பெற்றிருந்த கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் சாக்த நெறியில் வணங்கப்பட்டாள். இன்று வரை சுமார் 5000 ஆண்டுகளாக இத்தலத்தில் படவேட்டம்மன் அருள் தரும் அம்மனாக இருந்து மக்களின் குறைகளைப் போக்கி வேண்டும் வரம் அளித்து அருள் பாலித்து வருகிறாள்.

பௌத்த மடாலயங்களில் மருத்துவ சேவையும் நடந்ததால் அங்கிருந்த சிலைகளை மக்கள் நோய் தீர்க்கும் சக்தி மிக்க



**பச்சை தாரா தேவி தியான முத்திரையில் அமர்ந்திருத்தல்**

தெய்வங்களாகப் போற்றினர். பெண் தெய்வங்கள் ஒரு கையில் கத்தியும் மறு கையில் மருந்து கிண்ணத்துடனும் காட்சி அளித்தன. அவை பெண்புத்தர்கள் அல்லது பர்நஷ்வரி எனப்பட்ட பெண் துறவி / தெய்வம் ஆகும்.

நாகப்பட்டினத்தில் நீலாயதாஷி, திருவானைக்கா அகிலாண்டேஸ்வரி, காஞ்சி காமாட்சி, சங்கிரன்கோயில் கோமதி, சிறுவாச்சூர் லலிதாம்பிகை போன்றோர் மற்றும் வட மாவட்டங்களில் உள்ள திரௌபதி (தர்மராசா) பௌத்தர்கள் வணங்கிய பச்சை தாரா தேவியாக இருக்கலாம். தாரா பெரும்பாலும் நின்ற கோலத்தில் காணப்பட்டாள். வசுதாரா (முத்தாரம்மன்) லலிதாசனத்தில் இருந்தாள். தனிப் பெண் தெய்வங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்ட சிவன் கோயில்களில் இருந்தால் ஆதிசங்கரர் அவற்றிற்குப் பல வழிக்ளில் வீரியத்தை குறைத்து சாந்தமாக்கினார். படவேட்டம்மன் கோயிலில் பாண லிங்கம் வைத்தார். லிங்கம் இருக்குமிடத்தில் பெண் தெய்வத்தின் சக்தி குறையும் என்பது ஆணாதிக்கச் சமயங்களின் நம்பிக்கை.

பக்தி இயக்கக் காலத்தில் தாரா போன்ற பௌத்தத் தனிப் பெண் தெய்வங்கள் சிவன் கோயிலில் அம்மன் அந்தஸ்து பெற்றன. எனினும் சில பெண் தெய்வங்கள் தனிக்கருவறையில் இருந்தாலும் அவை ஜோடி தெய்வங்களாக இருப்பதில்லை. (எ-டு- திருவானைக்கா அகிலாண்டேஸ்வரி). இத்தகைய கோயில்களில் பள்ளியறை இருக்காது. இருவரும் இணைவது கிடையாது. அம்மன் தனித்து நிற்கும்.

மக்களின் செல்வாக்கும் நம்பிக்கையும் பெற்ற பௌத்த சாமிகளை முழுமையாக அகற்ற இயலாமல் வட நாட்டில் தோன்றிய தமிழ்ப் பண்பாட்டுக்கு ஒவ்வாத புராணக் கதையைப் புகுத்தி வைதீக தெய்வங்களாக மாற்றியுள்ளனர்.

பௌத்தர்களின் தனிப் பெண் மருத்துவத் தெய்வங்கள் அமர்ந்த நிலையில் காட்சி அளித்தன. மஞ்சள் நிறம் உடையன. இவற்றின் காலடியில் காமம், குரோதம், உலோபம் போன்ற நோய்க் காரணிகள் அசுர ரூபத்தில் காணப்பட்டன. மூன்று அசுரர்களின் தலைகளாகச் சித்திரிக்கப்பட்டன. இவர்களின்



**அம்மனின் காலடியில் சிவலிங்கத்தின் கந்துப் பகுதி (தூண்) மற்றும் அம்மன் முகம் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது**

*கையில் இருப்பது அமிர்தம் என்றும் கூறுவர். அதுவும் நோயற்ற வாழ்வை நீண்ட ஆயுளை மரணமில்லா நிலையைத் தரவல்லது. (இந்து சமயத்துக்குள் இரண்டறக் கலந்து விட்ட பௌத்த பெண் தெய்வங்கள் குறித்து மேலும் நுட்பமாக ஆராய வேண்டியுள்ளது).*

*பாணலிங்கம் மட்டும் படவேட்டம்மன் கோயிலில் பாணலிங்கம் மட்டும் உள்ளது. அதாவது சிவலிங்கத்தின் கந்துப் பகுதி (தூண்) மட்டும் உள்ளது. அதனைத் தாங்கி நிற்கும் ஆவுடை என்ற யோனிப் பகுதி காணப்படவில்லை. பாணலிங்கம் என்பது சிசுனம் அல்லது சிசுன தேவர் என்று அழைக்கப்படும் லிங்கம் ஆகும். இதற்குக் கீழே உள்ள மற்ற சிவலிங்கங்களில் காணப்படும் ஆவுடை என்பது இங்கு இடம்பெறவில்லை. ஆவுடை இருந்தால்*

மட்டுமே சிவலிங்கத்தின் வீரியத்தைத் தாங்கிக் கொள்ள முடியும். இதனை ஒரு புராணக் கதையின் மூலம் தெளிவு பெறலாம்.

ஒருமுறை ரிஷி பத்தினிகளை சிவபெருமான் நிறை (கற்பு) அழித்ததனால் ரிஷிகள் அவருடைய ஆணுறுப்பைத் துண்டித்து விட்டனர். அந்த உறுப்பு அமைதி அடையாமல் தரையில் விழுந்து அக்கினியாக அதிக வெப்பத்துடன் துள்ளிக் கொண்டிருந்தது. அதன் வெப்பத்தை சகிக்க இயலாமல் பூலோகமும் மேலோகமும் தகித்தன.

துடித்துக் கொண்டிருந்த சிவனின் சிசுனத்தை பார்வதி தன்னுடைய யோனிக்குள் ஏற்றுக் கொண்டாள். அதன் பின்பு பூலோகமும் மேலோகமும் சாந்தமாயின. பாண லிங்கத்தின் வெப்பத்தைத் தாங்கக் கூடிய சக்தி அம்பாளின் ஆவுடைக்கு மட்டுமே உண்டு. படவேட்டம்மன் கோயிலில் அம்பாளே அதீத சக்தி உடைய ஆவுடையாக விளங்குவதால் அங்குப் பாண லிங்கம் மட்டும் இடம்பெற்றுள்ளது எனத் தெளியலாம்.



**சிந்து சமவெளி கொற்றவை அருகில் கலை மான்**

*ரேணுகாதேவி கதைக்கு முந்தைய நிலையை ஆராய்ந்தால் இக்கோயில் சாக்த வழிபாட்டுக்குரிய சக்தி ஸ்தலமாகும். அதனால் தான் முக்கிய சக்தி ஸ்தலங்களில் ஒன்று என்கின்றனர். மொட்டை அடித்தல், வெல்லம் மிளகு போடுதல் போன்றன பழைய பௌத்தத் தலங்களின் வழிபாட்டு முறைகளின் தொடர்ச்சி ஆகும். அத்தி மரச்சிலையும் ரிஷி (துறவி) சிலையும் இருப்பதால் இக்கோயில் முன்பு தாந்திரீக பௌத்தர்களின் வழிபாட்டுத் ஆவுடை வழிபாட்டுத் தலமாக இருந்திருக்கும்.*

*கிமு முதலாம் நூற்றாண்டில் கொற்றவையாக படைவீரர்களால் வணங்கப்பட்டு வந்த படை வீட்டம்மன் என்ற இப்பெண் தெய்வம் பௌத்த சமயம் செல்வாக்கு பெற்றிருந்த கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் சாக்த நெறியில் வணங்கப்பட்டாள். இன்று வரை சுமார் 5000 ஆண்டுகளாக இத்தலத்தில் படவேட்டம்மன் அருள் தரும் அம்மனாக தாயாக இருந்து மக்களின் குறைகளைப் போக்கி வேண்டும் வரம் அளித்து அருள் பாலித்து வருகிறாள்.*





**சைவர் சமணர்களை கழுவேற்றினர் என்பதற்கு சான்றாக காணப்படும் புடைப்பு சிற்பம்**

முனைவர் செ. இராஜேஸ்வரி

# 11. திருவாலங்காட்டு காளி நீலி

திருவாலங்காடு என்னும் சிவத்தலம் காரைக்கால் அம்மையாரால் புகழ் பெற்ற சிவ தாண்டவத் தலமாகும். இவரது கதையை நீக்கிவிட்டு முன் வரலாற்றை ஆராய்ந்தால் இத்தலம் காளி அம்மன் கோயில் இருந்த இடம் என்பது தெளிவாகும்.

திருவாலங்காடு என்பது பழைய காளி கோயில் ஆகும். பின்னர் அது சிவன் கோயிலாக வடிவமைக்கப்பட்டது. காளியை நடனத்தில் தோற்கடித்து சிவன் வெற்றி பெற்றதால் இக்கோயில் சிவன் கோயில் ஆயிற்று என்று புராணக் கதை கூறுகிறது. கருங்காளியைத் தோற்கடித்த வரதராஜ பெருமாள் அத்தி வரதராக காஞ்சிபுரத்தில் கோயில் கொண்டார்.

### பிடாரி - நீலி - காளி

பழந்தமிழகத்தில் கி.மு மூன்றாம் நூற்றாண்டுக்கு முன்பு நாகர்குலத்தின் பிடாரி கோயில்கள் பௌத்தர்கள் காலத்தில் நீலியின் கோயிலாகி சைவர்கள் காலத்தில் காளியம்மன் கோயிலாகின. சைவ சமய எழுச்சிக் காலத்தில் சிவனால் தோற்கடிக்கப்பட்ட காளி செல்வாக்கிழந்து போனாள். பின்பு சிவன் கோயில் அல்லது பெருமாள் கோயில் நிறுவப்பட்டு சைவ வைணவம் செல்வாக்குப் பெறத் தொடங்கியது. அவற்றிற்கென்று புதிய புராணக் கதைகள் தோன்றின. இத்தலத்திற்கு சொல்லப்படும் கதை பழைய கதை என்றாலும் பல தலங்களுக்கு ஒரே கதை வழங்குவதும உண்டு. இந்த திருத்தலத்திற்கும் அவ்வாறு ஒரு கதை வழங்குகின்றது .



**திருவாலங்காடு காளி கோயில்**

## கதை 1

*ஆலங்காடு என்று அழைக்கப்பட்ட இவ்விடத்தில் மக்களுக்கு சும்பன், விசும்பன் என்ற அரக்கர்கள் பெரும் தொல்லைகள் கொடுத்து வந்தனர். பாதிக்கப்பட்ட மக்கள் இறைவனிடம் வேண்டினர். பார்வதி தேவி தன் கோபப் பார்வையால் காளியை உருவாக்கி அசுரர்களை அழித்தாள். அசுரர்கள் காலத்திற்குப் பின்பு ஆலங்காட்டில் காளி அதிகாரம் செய்ய தொடங்கினாள். தெய்வமானாள். காலம் போகப் போகக் காளியும் கொடூரச் செயல்களில் ஈடுபட்டாள்.*

*மூஞ்சகேசி கார்க்கோடக முனிவர் தொடர்ந்து தியானத்தில் இருந்தபோது அவரை சுற்றி மூஞ்சப் புல் வளர்ந்து விட்டதால் அவரை மூஞ்ச கேசி முனிவர் என்று அழைத்தனர். அவர் தவத்துக்குத் தீயவர்களால் இடையூறு ஏற்பட்ட போது சிவபிரானிடம் வேண்டினார். சிவபிரான் தீயவர்களின் தொல்லையில் இருந்து முனிவரை காப்பாற்ற விரும்பினார்.*

*ஆலங்காட்டில் அடுத்தடுத்துத் தொல்லைகள் ஏற்படுவதைக் கண்ட சிவபெருமான், தானே கோர வடிவம் கொண்டு*

ஆலங்காட்டுக்கு வந்து சேர்ந்தார். காளியை நடனப் போருக்கு அழைத்தார். ஆணவம் கொண்ட காளி நடனப் போட்டிக்கு ஒப்புக்கொண்டு தோற்றுப் போனாள். சிவன் தன் இடக்கால் பெரு விரலால் கீழே விழுந்த குண்டலத்தை எடுத்து காதில் அணிந்து கொண்டார். அதுபோல காளியால் தன் காலை தலை உயரத்துக்குத் தூக்க இயலவில்லை. பெண்கள் தன் காலை உயரே தூக்குவது அநாகரீகம் என்ற கருத்து நிலவிய காலம் அது. எனவே காளி தோற்றுப் போனதாக அறிவிக்கப்பட்டாள்.

காளியின் ஆற்றலை உணர்ந்த சிவபெருமான் இத்தலத்தில் 'உனக்கே முதல் பூசை நடக்கட்டும் பின்பு எனக்குப் பூசை நடை பெறட்டும். உன்னை வழிபட்டவர்கள் என்னை வழிபட்டால் தான் அவர்களுக்கு முழுப் பலன் கிடைக்கும்' என்று கூறினார்.

வரலாற்று அடிப்படையில் ஆதியில் இருந்து கோயில் கொண்டிருந்த சகல சக்திகளும் படைத்த வெற்றித் தேவதையான அம்மனுக்கு முதல் பூசை நடைபெறும். இடைக்காலத்தில் வந்து கோயில் கொண்ட சிவனுக்கு இரண்டாம் பூசை நடைபெறுகிறது. இதுவே இத்திருத்தலத்தின் இறை வரலாறு..



**சும்பன், விசும்பன் திலோத்தமைக்காக (காளி) சண்டையிடுதல்**

## காளியம்மன் கதை

*திருவாலங்காடு பற்றி தொண்டை மண்டல கதகம் ஒரு வரலாற்றை எடுத்துரைக்கின்றது. இவ்வரலாறு ஆலங்காடு நீலியைப் பற்றியதாகும் இவளைப் பழையனூர் நீலி என்றும் அழைப்பார்கள். காரணம் இவ்வூருக்கு பழையனூர் என்ற பெயரும் முற்காலத்தில் இருந்தது.*

## பழையனூர் நீலி

*பழையனூர் நீலி என்பவள் இறந்து போன ஒரு பெண்ணின் ஆவி ஆவாள். இவளை இவளது கணவன் ஏமாற்றிக் கொலை செய்து விட்டான். பின்பு அவன் வேறொரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டு சுக வாழ்வு நடத்தி வந்தான். அப்போது நீலி அவளைப் புதைத்த இடத்தில் இரவில் அலைந்து திரிந்தாள். இவளுடைய ஆவி அலைந்து திரிகின்றது என்ற காரணத்தினால் அவள் கணவன் அவ்வழியே செல்வதைத் தவிர்த்தான். இவன் வணிக குலத்தைச் சேர்ந்தவன் என்பதால் வேறு வழியில் தன் வியாபார நிமித்தமாக பல ஊர்களுக்குச் சென்று வந்தான். ஒரு நாள் இவன் வெளியூருக்கு வியாபார நிமித்தம் சென்றபோது நீலி இவன் பின்னால் வந்து 'என்னங்க*



**சிவன் தன் இடக்கால் பெரு விரலால் கீழே விழுந்த குண்டலத்தை எடுத்து காதில் அணிந்து கொள்ள இடது காலை தூக்கிய நிலையில் காட்சி தருகிறார்**



**முதல் பூஜை நடக்கும் காளி அம்மன்**

*நில்லுங்க என்னங்க நில்லுங்க' என்று சொல்லிக் கொண்டே வந்தாள்.*

*நீலியின் கணவன் வேக வேகமாக நடந்து அருகில் வேளாளர்கள் குடியிருக்கும் ஊருக்கு வந்து விட்டான். அங்கு வேளாளர்களிடம் தன்னைத் துரத்தி வருபவள் ஒரு பேய் என்று கூறினான். ஆனால் நீலியோ அங்கிருந்த ஒரு எருக்கங்குச்சியை எடுத்து இடுப்பில் குழந்தையாக்கி வைத்துக் கொண்டு 'ஐயா நான் இவர் மனைவி. இக்குழந்தை இவருடைய குழந்தை' என்று கூறி 'அப்பாவிடம் போ' என்றாள். அந்தக் குழந்தை நீலியின் கணவனிடம் தாவியது. அவனோ பயந்து நடுங்கி 'இல்லை*



**பழையனூர் நீலி சன்னதி**

இல்லை, இவள் பேய் தான். என்னைக் கொல்ல வந்திருக்கிறாள் தயவுசெய்து என்னை காப்பாற்றுங்கள்' என்று அங்கிருந்த வேளாளர்களிடம் வேண்டிக் கொண்டான்.

நீலியின் கணவன் 'இவளோடு என்னை அனுப்பினால் என் உயிருக்கு உத்தரவாதம் இல்லை' என்று கெஞ்சினான். அப்போது அங்கிருந்த வேளாளர்கள் 'ஐயா உன் உயிர் போனால் எங்கள் 70 பேர் உயிரையும் தருகின்றோம். பயப்படாதே. அப்படி ஒன்றும் உன் உயிருக்கு ஆபத்து நேரிடாது. நாங்கள் இருக்கிறோம்' என்று சொல்லி அவர்கள் இருவரையும் சமாதானம் செய்து வைக்க வேண்டும் என்று கருதி இருவரையும் ஒரே வீட்டில் இரவில் தங்க வைத்தனர். 'காலையில் பேசிக்கொள்ளலாம். இரவில் இங்கேயே தங்குங்கள்' என்று சொல்லிக் கதவை வெளியே பூட்டிவிட்டனர்.

அதிகாலையில் வேளாளர்கள் போய்க் கதவைத் திறந்து பார்க்கும் போது அந்தப் பெண்ணையும் குழந்தையையும் காணவில்லை. வணிகன் இறந்து கிடந்தான். அவன் சொன்னது உண்மைதான் அவள் பேய் தான் என்பது அவர்களுக்குப் புரிந்தது. இப்போது தாம் சொன்ன சொல்லைக் காப்பாற்ற வேண்டுமே

என்ற ஆதங்கம் வேளாளர் குடி மக்களுக்கு ஏற்பட்டது. 70 பேரும் தீ வளர்த்து உயிர் துறந்தனர்.

## தீப் பாய்ந்த மண்டபம்

வேளாளர்கள் தீப் பாய்ந்த இடத்தைக் குறிக்கும் வகையில் திருவாலங்காட்டில் இருந்து ஒரு கிலோமீட்டர் தொலைவில் தீப்பாய்ந்த மண்டபம் என்று ஒரு மண்டபம் உள்ளது. இங்கே உள்ள தொட்டியின் உள்புறத்தில் யாகம் வளர்த்து அதற்குள் இறங்குவது போன்ற உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இவர்களின் வீர மரணத்திற்குச் சாட்சியாக எதிரே சாட்சி பூதேஸ்வரர் சன்னதியும் காணப்படுகின்றது.

## கூழ் ஆண்டவர் கோத்திரம்

இறந்து போன வேளாளர்களின் வழி வந்தோர் இன்றைக்கும் திருவாலங்காட்டு இறைவனுக்கு திருவடியார்களாகவே வாழ்கின்றனர். கூழ் ஆண்டவர் கோத்திரம் சதா சேர்வை என்ற கல்வெட்டில் இவர்களின் சேவை குறிக்கப்பட்டுள்ளது. இவர்கள் வெகு காலமாக வெறும் கூழை மட்டும் உண்டு வாழ்ந்தனர். தன்



**வாக்குத் தவறாத எழுபது வேளாளர் தீப்பாய்ந்ததாகக் கருதப்படும் இடத்தில் உள்ள மண்டபம்**



**திருவாலங்காட்டு காளி கோயிலின் குளம்**

*நிலத்தில் விளைவித்த நெல்லை இறைவனுக்கே முழுவதுமாக காணிக்கையாகக் கொடுத்துவிட்டனர். இதுவே திருவாலங்காட்டு நீலி அல்லது பழையனூர் நீலியின் கதையாகும்.*

*நீலி கதைக்கு இன்னொரு பக்கமும் உண்டு. நீலி என்பவள் பௌத்த மதப் பெண் தெய்வம். பௌத்த மதம் வெளியேறிய பிறகு மக்கள் அவளை வணங்கக் கூடாது என்பதற்காக அவள் கொடியவள் என்று பொய்க்கதை கட்டினர். ஆயினும் மக்கள் அவளை நீலி என்ற பெயரில் வணங்காமல் காளி என்ற பெயரில் வணங்கி வந்தனர். காளியம்மன் நடனப் போட்டியில் தோற்ற கதை உருவானது. எனினும் காளியம்மனுக்கு மக்களிடம் இருந்த செல்வாக்கைக் குறைக்க இயலாத காரணத்தினால் அவளுக்கே முதல் பூசையும் மரியாதையும் நடைபெறுகிறது. இங்கே உள்ள குளத்தின் கரையில் நடனப் போட்டியில் தோற்றுப் போன காளியின் உருவம் காணப்படுகின்றது.*



# 12. திரௌபதி அம்மன்

மயிலை சீனி வேங்கடசாமி தன்னுடைய ஆராய்ச்சியின் விளைவாக புத்த சமயத்தவர்களின் போதிசத்வர், தாராதேவி கோயில்கள் பௌத்தம் செல்வாக்கிழந்த பின்பு காலப் போக்கில் திரௌபதி கோயில்களாக மாற்றப்பட்டன என்று தெரிவித்துள்ளார். தாரா கோயில்கள் அனைத்தும் திரௌபதி கோயில்களாக மாறவில்லை. சில காளியம்மன் கோயிலாகவும் மாறியுள்ளன. தமிழகத்தின் வட, தென் மாவட்டங்களில் உள்ள திரௌபதி கோயில்கள் தொடக்கத்தில் தாரா கோயில்களாக இருந்துள்ளன.

## தாரா என்ற பெண் போதிசத்வர்

ஆரம்பத்தில் கடவுள் வழிபாட்டை எதிர்த்து வந்த புத்த சமயம் காலப்போக்கில் போதி சத்துவர்களில் ஆண்களையும் பெண்களையும் தங்களுடைய புத்த விகாரைகளில் சிலை எடுத்து பூவும் புகையும் அர்ப்பணித்து மரியாதை செய்தது.

## தாரா என்ற தெய்வம்

தாரா தேவி வளமை, கல்வி, அமைதிக்குரிய தெய்வம் ஆகும். இவள் மஞ்சள் தாரா, வெள்ளை தாரா, பச்சைதாரா என்று பல வகைகளில் பெயர் சூட்டப்பட்டு தனித்தனியாக வணங்கப்பட்டாள். இவற்றில் பச்சை தாரா என்பவள் வளமைத் தெய்வமாகப் போற்றப்பட்டாள். இவளை வணங்கினால் நிறைய செல்வம் சேரும். குழந்தை வளம் பெருகும். தொழில் வளம் சிறக்கும், என்று புத்த சமயத்தை பின்பற்றியவர்கள் நம்பினர்.

## ஒற்றைச் சடை ஏகவல்லி

பச்சை தாரா தலைவிரி கோலமாக இருக்கும் தெய்வம் அல்ல. தலை முடியைக் கோதி ஒற்றைச் சடையுடன் காட்சி தருவாள். இதனால் இவளை ஏக வல்லி, ஏக ஜடை என்று அழைத்தனர், பொதுவாக புத்த துறவிகள் முடி வளர்த்து உச்சியில் முடிந்து இருப்பார்கள். அவர்கள் முடியை வெட்டக்கூடாது. வெட்டினால் தங்களது ஆத்ம பலத்தை இழந்து விடுவோம் என்பது அவர்களின் நம்பிக்கை. அவர்களைத் தொடர்ந்து தமிழகத்தில் சித்தர்களும் சாதுக்களும் தலை முடியை கத்திரிக்காமல் நீளமாக வளர்த்து உச்சந்தலையில் முடிந்து வைத்தனர். இதனை சடாமுடி என்று அழைப்பார்கள். (இதற்கு நேர் மாறாக சமண முனிவர்கள் தாங்களே தங்கள் தலை முடியைக் கொஞ்சம் கொஞ்சமாகப் பிடுங்கி தலையை மழித்துக் கொள்வர்.) பிற்காலத்தில் பௌத்தத் துறவிகள் எப்போதும் கையில் சவரக்கத்தி வைத்திருந்து தங்கள் தலைமுடியைத் தாமே மழித்துக் கொண்டனர். இது ஒரு காணிக்கை முறையாக மாறியது. இன்றைக்கும் முருகன், பெருமாள், அம்மன் கோயில்களாக மாற்றப்பட்ட பௌத்தக் கோயில்களில் தலைமுடி காணிக்கைக் கொடுக்கும் பழக்கம் உள்ளது.



**பச்சை தாரா**

## தாராவின் தோற்றம்

பச்சை தாரா என்ற தெய்வம் நேபாளத்தில் வஜ்ராயன புத்த சமயத்தாரிடம் முதலில் தோன்றியது. ஏழாம் நூற்றாண்டில் மகாயானப் பிரிவு தாராவை தெய்வமாக ஏற்றுக்கொண்டது. இப்பிரிவில் அவலோகதீஸ்வரரின் ஜோடியாக வைத்து தாரா வணங்கப்பட்டாள். இந்தியாவுக்கு வந்து நாளந்தா பல்கலைக்கழகத்தில் படித்துவிட்டு நேபாளத்துக்குத் திரும்பிய



**ஏகவள்ளி அம்மன் - வேலூர்**

நாகார்ஜுனா என்பவர் பச்சைதாரா அல்லது ஏக சடையாள் என்பவளை ஒரு தனித் தெய்வமாகக் கொண்டு வணங்க வேண்டும் என்று போதித்தார். பின்பு இவ்வழிபாடு இந்தியாவுக்குள் நுழைந்தது.

## தாராவின் உருவம்

பச்சைதாரா உருவத்தின் குறிப்பிடத்தக்க ஓர் அம்சம் அவளது கண்கள் மற்றும் மார்பு. இவளுக்கு ஒரே ஒரு கண்ணும் ஒரே ஒரு மார்பு மட்டுமே உண்டு. (சங்க இலக்கியத்தில் ஒரே மார்பு கொண்ட ஒரு பெண் பற்றிய தகவல் உண்டு. மதுரையை எரித்த பின்பு கண்ணகிக்கு ஒரு மார்பு தான் இருந்தது). தாரா சக்தியுள்ள தெய்வம் என்ற நம்பிக்கை வளர்ந்த போது இவளுக்கு 12 முகங்களும் 24 கைகளும் உண்டு என்றனர். இறைவனின் வலிமையைக் காட்டும் வகையில் அதன் தலை, கை, ஆயுதங்களின் எண்ணிக்கை உயரும்.

## எண்ணிக்கை உயர்வு

தெய்வங்களின் சக்திக்கு ஏற்ப தலை, கண், கை போன்ற உறுப்புகளின் எண்ணிக்கையைப் பக்தர்கள் உயர்த்திப் போற்றித்

*தெய்வக் கதைகளை இயற்றுவர். மதுரையில் அன்னை மீனாட்சி பெண் குலத்தின் அரசியாக இருந்து வேப்பமாலை அணிந்து பாண்டிய நாட்டை ஆட்சி செய்தவள் என்பதால் அவளுடைய பெண் அதிகாரத்தைக் குறிக்க மூன்று தனங்கள் குறியீடாக அமைந்தன.*

## எண்ணிக்கை குறைவு

*தாரா தேவி, ஆண்களை எதிர்த்து நிற்கும் ஆற்றல் படைத்தவள். ஆணுக்கு ஆணாகவும் பெண்ணுக்கு பெண்ணாகவும் அவள் இருப்பதனால் அவளுக்கு பெண்மைக்குரிய அங்கங்களில் ஒன்று குறைத்துக் காட்டப்படுகிறது. இது அவளுடைய ஆண்மைத் தன்மையையும் வீரத்தையும் குறிக்கும் குறியீடு ஆகும். (பிற்காலத்தில் அர்த்தநாரி உருவம் தோன்ற முதல் காரணமாக இருந்தது இப்பச்சை தாராவின் உருவத் தோற்றம் எனலாம்).*




## திருமா உண்ணி / திருமா பத்தினி

*சங்க இலக்கியத்திலும் பின்னர் சிலப்பதிகாரத்திலும் ஒரு முலை இழந்த பெண்ணைப் பற்றிய குறிப்பு உள்ளது. கண்ணகி தன் ஒரு முலையைத் திருகி எறிந்து மதுரையை எரித்துத் தெய்வமான நிகழ்வைச் சிலப்பதிகாரம் சுட்டுகிறது. ஒரு முலை இழந்த திருமா பத்தினி என்ற தொடர் கண்ணகி என்ற பத்தினித் தெய்வத்தைக் குறிக்கின்றது. ஒரு முலை இழத்தல் என்ற கருத்தியல் பெண் ஒருத்தி அழிவை ஏற்படுத்தும் போது அவளை*

*அழிவுக் கடவுளாகவும் பகையை வெல்லும் பரதேவதையாகவும் சுட்ட பயன்பட்டுள்ளது.*

## உண்ணி

*சங்க இலக்கியத்தில் வரும் ஒரு முலை இழந்த திருமா உண்ணி என்ற பெண்ணை கண்ணகி என்பாரும் உளர். உண்ணி என்ற சொல் தாமரையின் மஞ்சள் நிறப் பொகுட்டைக் குறிக்கும். இப்பெயர் ஆட்பெயராக புத்த சமயம் பரவி இருந்த கேரள மாநிலத்தில் விளங்குகின்றது. ஆண்களுக்கும் பெண்களுக்கும் உண்ணி என்ற பெயர் சூட்டப்படுகின்றது. ஒரு முலை மட்டுமே உடைய இப்பெண்ணின் பெயர் தெய்வப் பெயராகவே இன்றும் அங்குப் போற்றப்படுவதை அறியலாம்.*

## வடமாவட்டங்களில் திரௌபதியாக மாற்றம் பெற்ற தாரா

*பச்சைதாராவுக்கு ஏக வள்ளி என்ற பெயரில் வட தமிழ்நாட்டில் பல இடங்களில் கோயில் கட்டி வழிபட்டு வந்தனர். சென்னையில் ஜார்ஜ் கோட்டை அருகில் உள்ள ஏக வல்லி கோயில் பச்சை தாராவுக்கு எழுப்பப்பட்ட கோயிலாகும். காஞ்சி, செங்கல்பட்டு, விழுப்புரம், வேலூர், திருவண்ணாமலை போன்ற வட மாவட்டங்களில் திரௌபதி கோயில்கள் நிறைய உள்ளன. கிபி ஏழு முதல் ஒன்பதாம் நூற்றாண்டு வரை பல்லவர்கள் ஆட்சியில் அடிக்கடி போர்கள் நடைபெற்றன. அப்போது மக்களிடையே வீர வேட்கையை எழுப்ப வேண்டும் என்பதற்காக மன்னனின் ஆணை காரணமாக ஊருக்குள் ஆங்காங்கே மகாபாரதம் வாசிக்கப்பட்டது. இதனால் மகாபாரதத்தில் வரும் தர்மர், திரௌபதி, விமான, கர்ணன், அர்ஜுனண் போன்றவர்கள் மீது மக்களுக்கு பெருமதிப்பு ஏற்பட்டது. போதி தர்மர் மற்றும் தாரா தேவி கோயில்கள் தருமராசா (போதிராஜா) மற்றும் திரௌபதி கோயில்களாகப் பெயர் மாற்றம் பெற்றன. போர் வேட்கையைத் தூண்டும் வகையில் படுகளம் நிகழ்ச்சியும் இங்கு நடைபெற்றது.*

## ஆதித் திரௌபதி கோயில்

*செஞ்சி மாவட்டத்தில் மேலச்சேரி என்ற ஊரில் உள்ள திரௌபதி அம்மன் கோயில் தமிழகத்தில் கட்டப் பட்ட முதல்*



**மேலச்சேரி திரௌபதி**

கோயில் என்றும் வேறு இடங்களில் திரௌபதி அம்மனுக்கு கோயில் எழுப்பப்படும் போது இங்கிருந்தே பிடிமண் எடுத்துக் கொண்டு போவதாகவும் இவ்வூர் மக்கள் தெரிவிக்கின்றனர். வட மாவட்டங்களில் வாழும் வன்னிய சமூகத்தினர் பெரும்பாலும் திரௌபதி அம்மனைத் தங்கள் குல தெய்வமாகக் கொண்டு வழிபடுகின்றனர்.

**மதுரையில்**

தென்மாவட்டங்களில் திரௌபதி கோயில்கள் அதிகம் காணப்படவில்லை. மதுரையில் சேட்டு மக்கள் வணங்குகின்ற திரௌபதி அம்மன் கோயில் ஒன்று கிபி 1884 ஆம் ஆண்டு லாலா பா ராமகிருஷ்ண பாகவதர் அவர்களால் கட்டப்பட்டது.

ஆரம்பத்தில் தாரா தேவி அத்தி மரத்தில் செய்யப்பட்டிருந்தது. பின்பு அது திரௌபதி அம்மன் கோயிலாக மாறிய போது கற்சிலை வடிக்கப்பட்டது. இங்கு போதிதர்மருக்கும் தாரா தேவிக்கும் இரண்டு தனித்தனி கோயில்கள் இருந்தன. அவை இன்று தர்மர் சன்னிதி என்றும் திரௌபதி சன்னதி என்றும் அழைக்கப்படுகின்றன. மதுரை திரௌபதி அம்மன் கோயில் 19ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டதனால் முத்தியாலு ராவுத்தருக்கும் இங்குத் தெய்வத் தகுதி வழங்கப்பட்டுள்ளது. இன்னொரு திரௌபதி அம்மன் கோயிலிலும் ராவுத்தர் சன்னதி என்று தனி சன்னதி உள்ளது. இவை காலத்தால் பிந்தியவை.

**காளியம்மன்**

திரௌபதி வழிபாடு காளி வழிபாட்டுடன் இங்கு இணைந் துள்ளது. ராகு காலத்தில் இத்தெய்வத்துக்கு அரளி மலர் சாற்றி வழிபடுகின்றனர் கருவறைக்கு அடுத்த மகாமண்டபத்தில் காளியம்மன், கமலக்கனி விநாயகர் ஆகியோருக்கு சன்னதி உள்ளது.

**சந்தோஷி - விநாயகர்**

விநாயகர் தன் மகளான சந்தோஷியுடன் சேர்ந்து ஒரு சன்னதியில் காட்சி தருகின்றார். சந்தோஷி மாதா வழிபாடு வடநாட்டில் பரவலாக உள்ளது. தென் மாநிலங்களில் கிடையாது ஆனால் வட மாநில பக்தர்கள் விநாயகர் உடன் சந்தோஷியையும் சேர்த்து வைத்து வழிபடுகின்றனர். இவை தவிர மகாமண்டபத்தில் சத்யநாராயணா, உபதேச கிருஷ்ணா, முத்தாலு ராவுத்தர் சாமி, சுப்பிரமணியன், குரு, சனி என்று இவர்களுக்குத் தனித்தனி சன்னதி உள்ளன. சித்திர குப்தருக்கும் ஒரு தனிச் சன்னதி உள்ளது. சித்ர குப்தரும் புத்த சமயக் கடவுள் ஆவார். சித்ரா பௌர்ணமி அன்று புத்த சமயத்தின் முக்கிய ஸ்தலமாக விளங்கிய காஞ்சிபுரத்தில் உள்ள சித்ரகுப்தர் கோயிலில் அவருக்கு விழா நடைபெறும்.

**தாரா - கண்ணகி - திரௌபதி**

மதுரையில் உள்ள திரௌபதி அம்மன் கோயில்களில் ஒரு வித்தியாசமான கதை புழக்கத்தில் உள்ளது. கண்ணகி மதுரையை

*எரித்த பிறகு எஞ்சி இருந்த மக்கள் தங்களைக் காப்பாற்றும்படி சிவபெருமானை வேண்டினர். உடனே பார்வதி தேவி இங்குத திரௌபதியாக வந்து குடிகொண்டாள் என்று சைவப் பேரெழுச்சிக்குப் பின்பு நாட்டுப்புற தெய்வங்களை சிவன் பார்வதியோடு தொடர்புபடுத்தும் போக்கு தொடங்கியது. இங்கு அரவானுக்குத் தனிச் சன்னதி உண்டு. கோயிலுக்கு வெளியே மகாமுனிஸ்வரருக்கும் சூலக் கல்லுக்கும் இரண்டு தனித் தனித் சன்னதிகளும் அமைக்கப்பட்டுள்ளன. மாதந்தோறும் பௌர்ணமி அன்று கோயிலில் விசேஷ பூஜைகள் நடைபெறுகின்றன. மதுரை அருகே திருவாதவூரிலும் திரௌபதி அம்மனுக்குத் தனிக் கோயில் உள்ளது.*

## மேல்பாதி ஊர் திரௌபதி

*மேல்பாதி என்ற ஊரில் உள்ள கோயிலில் தர்மராஜாவுக்கும் திரௌபதிக்கும் தனித்தனி சன்னதிகள் உண்டு. இங்குக் கருவறையில் திரௌபதியுடன், விஷ்ணு, துர்க்கை, சுபத்ரா, குந்தி ஆகியோரும் இருக்கின்றனர். வெளியே மகா மண்டபத்தில் உள்ள போதிராஜா அருகே நவாப் மன்னருக்கும் சிலைகள் உள்ளன. வலது பக்கம் நாக தேவதை சிலையும் உள்ளது.*

*ஐந்து ஆண்டுகளுக்கு ஒருமுறை திரௌபதி கோயிலில் அக்கினி வசந்த விழா என்ற பெயரில் தீமிதி விழா நடைபெறுகின்றது. போதி ராஜா, தரும ராஜா ஆகிய பெயர்கள் இக்கோயில் ஆரம்பத்தில் போதிசத்வர்களின் கோயில் என்பதை உறுதி செய்கிறது. தெய்வக்கதைகள் காலத்தால் பிந்தியவை ஆகும்.*

*தென்காசிக்கு அருகே உள்ள பைம்புளி என்ற கிராமத்தில் திரௌபதி அம்மனுக்குத் தனிக் கோயில் உண்டு. இங்கும் ஸ்ரீதர்மர் சன்னதியும் திரௌபதி சன்னதியும். உள்ளன ஆக போதி சத்துவர் (புத்த தர்மர், போதி தர்மர், தர்ம பாலர் போன்ற பெயர்கள்) மற்றும் தாரா தேவிக்கு என்று இருந்த புத்த விகாரைகள் காலப்போக்கில் ஸ்ரீதர்மர் என்றும் திரௌபதி என்றும் பெயர் மாற்றம் பெற்று தொடர்ந்து வழிபாட்டில் இன்று வரை இருந்து வருகின்றன.*



# துணைநூற் பட்டியல்

1. 11th International conference seminar on Tamil Studies, Chennai, Instrumental, of Asian Studies, Chennai, 2023.
2. Ramachandran T. N., The Nagapattinam and other Buddhist bronzes in the Chennai Museum, Director of Museums, Govt. Of Tamilnadu, 2005 (iv)
3. Tylor, E. B. Anthropology, (vol.1)
4. Juha B. S, The mythological origin of the Abor Dormitory System,
5. Ajit Mookerjee, Ritual Art of India, Thames and Hudson, London 1985.
6. Radhakamal Mookerjee, The culture and art of India, Munshiram Manoharlal Publication Pvt. Ltd., New Delhi.
7. James E.O, A study in pre historic Archaeology, Thames and Hudson, London, 1957.
8. Dr. Alexander P. C., Buddhism in Kerala, pub by, The Registrar, Annamalai University, Annamalai Nagar, 1949.
9. R.H. Kulkarni, Lajja Gouri - fertility and mother goddess worship (The New Indian Express 29th April 21)
10. Wendy Doniger O'Flaherty, Siva- The Erotic Ascetic, Oxford University Press,
11. Wall A.O., Eroticism of Religions, Mayur Publications, Delhi
12. Sheela na gig - architectural figure by John Harding (Britannica)
13. www.wikipedia.com
14. Facebook
15. *இலக்குவனார் திருவள்ளுவன், சனாதனம் பொய்யும் மெய்யும், மலர்க்கொடி வெளியிட்டகம், சென்னை 91, 2024.*
16. *கிருட்டிணமூர்த்தி கோ., தமிழ்நாட்டில் சமணம் (கி.பி. ஆறாம் நூற்றாண்டு வரை) செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம், சென்னை. 2022*
17. *ஞானசேகரன் தே. நாட்டுப்புறச் சமயம் தோற்றமும் வளர்ச்சியும், காவ்யா பதிப்பகம், கோவை. 2012*

18. சுபாஷிணி க. ராஜராஜனின் கொடை, தமிழ் மரபு அறக்கட்டளை வெளியீடு, சென்னை. 2022
19. வினோத் மலைச்சாமி, பாண்டியர்கள் முனி, ஜித்தன் பதிப்பகம், எடையூர், 2022.
20. மயிலை சீனி வேங்கடசாமி, பௌத்தமும் தமிழும், ஸ்ரீ செண்பகா பதிப்பகம், பாண்டி பஜார், சென்னை 17. 2010.
21. முனைவர் தேமொழி, தமிழகத்தில் பௌத்தம், தமிழ் மரபு அறக்கட்டளை வெளியீடு, சென்னை, 2023.
22. முனைவர் ரவி ச., தமிழக வரலாற்றில் மள்ளர்கள், இந்திரன் கோட்டம், வத்தலகுண்டு, 2021.
23. கண்ணகி கலைவேந்தன் (ப-ர்), தமிழ்ப் பண்பாட்டு வரலாறுகளும் சடங்குகளும், அவ்வை கோட்டம், திருவையாறு, 2009
24. பரமசிவன், தொ., அழகர் கோயில், பதிப்புத் துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை 21, 1989
25. சசிகலா கோ., அய்யன் சமூகம் தோற்றமும் வளர்ச்சியும், தடாகம், சென்னை, 2023
26. மணிமேகலை
27. ஷீலா நா கிக்ஸ், டாகினி, லிலித், லஜ்ஜா கவுரி பற்றிய கட்டுரைகள் பல உலாவி மூலமாகவும் கிடைக்கப்பெற்றன.
28. ராகுல சாங்கிருத்தியாயன், வால்காவிலிருந்து கங்கை வரை, நற்றிணை பதிப்பகம், சென்னை 2024
29. சிவ விவேகானந்தன், நாகர் வரலாறு, காவ்யா பதிப்பகம்
30. முத்துநாகு, சுளுந்தி (நாவல்),
31. ஏகாம்பரநாதன், தென்பாண்டி நாட்டு சமணக் கோயில்கள்,
32. அமீஷ், நாகர்களின் ரகசியம்
33. சசிகலா கோ, அய்யன் சமூகம் தோற்றமும் வளர்ச்சியும், தமகம் பதிப்பகம் சென்னை 2024.
34. திரௌபதி அம்மன் வழிபாடு
35. தேமொழி, தமிழகத்தில் பௌத்தம்






முனைவர் திருமதி **செ. இராஜேஸ்வரி**

தமிழக மாநில அரசின் சிறந்த மொழிபெயர்ப்பாளர் விருதாளர் (2022), சிறந்த பதிப்பக விருதாளர் (2023). தமிழணங்கு, சக்தி பெண்ணிதழ் ஆய்விதழ்களின் ஆசிரியர்


இவர் எழுதியும் மொழிபெயர்த்தும் வெளியிட்ட நூல்களின் எண்ணிக்கை 114. அவற்றுள் சமய வழிகாட்டி நூல்கள் 6. அவை வருமாறு:


























₹.250

Cover design : C. Meenatchi